உ

சிவமயம்.

# சிவஞானசித்தியார் பரபக்ஷமூலம்.

இஃது

சகலாகமபண்டிதரென்னும்

திருத்துறையூர்

## அருணந்திசிவாசாரியார்

திருவாய்மலர்ந்தருளியது.

இதற்கு

## தத்துவப்பிரகாசருரையுடன்

கொன்றமாநகரம் ம-ள-ள-ஸ்ரீ

முருகப்பமுதலியாரவர்கள் பௌத்திரரும்

அருணசலமுதலியாரவர்கள்

புத்திரருமாகிய

## சண்முகசுந்தரமுதலியாரால்

பரிசோதித்து

சென்னை தண்டையார்ப்பேட்டை

இலக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

யுவ௵ பங்குனிமீ

# விளம்பரம்.

## சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கினுள் உரையுடன் அச்சிட்டிருக்கும் சாத்திரங்களின் விபரம்.

| | | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|---|
| திருவுந்தியார் | மூலமுமுரையும் | 0 | 2 | 0 |
| திருக்களிற்றுப்படியார் | டிை | 0 | 4 | 0 |
| இருபாவிருபஃது | டிை | 0 | 3 | 0 |
| உண்மைவிளக்கம் | டிை | 0 | 1 | 6 |
| வினாவெண்பா கொடிக்கவி<br>உண்மைநெறிவிளக்கம் | டிை | 0 | 1 | 3 |
| போற்றிப்பஃறொடை | டிை | 0 | 1 | 3 |
| சங்கற்பநிராகரணம் | டிை | 0 | 8 | 0 |
| இவைகளொன்றாய்ச்சேர்த்துக்கட்டியது | | 1 | 8 | 0 |
| சிவப்பிரகாச மூலமுமுரையும் | | 1 | 8 | 0 |
| சிவஞானசித்தியார்பரபக்கம் | | 1 | 8 | 0 |

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணத்தைச்சார்ந்த சிந்தாதிரிப்பேட்டை ஐயாமுதலியார்வீதி - ௩௯-வது கதவிலக்கமுள்ள - ம - ா - ா - ஸ்ரீ, கொன்றமாநகரம் முருகப்பமுதலியாரவர்கள் வீட்டில் அருணாசலமுதலியாரவர்கள் குமாரர் சண்முகசுந்தரமுதலியாரிடத்திலும், சென்னைத் தங்கசாலைவீதிசுமைதாங்கிக்கடுத்த-௨௨௧ - வது கதவிலக்கமுள்ள வீட்டில் வே. குமாரசுவாமிஐயரிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

சிவமயம்.

# முகவுரை.

ஆன்மாக்கள்பலவற்றுளும் முத்தியையடைவதற்குக்காரணமாயுள்ளது மானுடதேகமேயாம். அத்தேகத்தை யடையப்பெற்ற நமதுசிற்றறிவிற்குப் பொன்றுத்துணையாயுள்ளது கல்வியொன்றே. அக்கல்வியை சமஸ்கிருதமெனனும் ஆரிய மொழியினும், தமிழ்மொழியினும், தொன்றுதொட்டுப்பயின்று, அறம், பொருள், இன்பம், வீடென்னு நான்கின்பயன்களையும் பெறப்படும். தமிழ்நாட்டிற்பிறந்து தமிழ்பயின்றுவருநாம் பாலியத்தில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி, முதுமொழிக்காஞ்சி, இன்னாநாற்பது, இனியாநாற்பது, திரிகடுகம், நான்மணிக்கடிகை, சிறுபஞ்சமூலம், ஏலாதி, நீதிநெறிவிளக்கம் என்னும் சிறுநூற்களை நற்குணநற்செய்கையமைந்த உபாத்தியாயரிடத்திற் கற்றுக்கொளல்வேண்டும். இதன்பின் இலக்கணநூலிற் சுருக்கமாயுள்ளதை வாசித்தல்வேண்டும். பின்னர் ஸ்ரீமத்உமாபதிசிவாசாரியார் திருவாய் மலர்ந்தருளியபடி:—

"வள்ளுவ, ரன்பாமொழி வாசகந், தொல்காப்பியமே,
தெள்ளு பரிமேலழகர் செய்தவுரை,—யொள்ளியசீர்த்
தொண்டர் புராணம், தொகைச்சித்தி, யோராறுந்
தண்டமிழின் மேலாந்தரம்."

என்னுநூற்களைக் கற்று அதிலமைந்த நல்லொழுக்க நற்செய்கைகளைப்பெற முயலல்வேண்டும். வீடுபேற்றிற்குரிய சாதனங்களையுணர்த்துஞ் சைவசித்தாந்தசாத்திரங்கள் பதினான்கினுள் விரிவாயு மிகத்தெளிவாயும் ஓதப்படுவது சிவஞானசித்தியா

றொன்றே. "ஆறாறு தத்துவமு மாணவமும் வல்வினையு, நீறாக முத்திநிலை நிற்போர்க்குப்—பேறாகப், பார்விரித்த நூலெல்லாம் பாரத்தறியச் சித்தியிலே, யோர்விருத்தப் பாதி போதும்." என்றுசிவபோகசாரத்தினும் "பாதிவிருததத்தாலிப் பார்விருத்தமாக வுணமை, சாதிததார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ" எனத் தாயுமானவரினும் "சிவத்திற்கு மேற்றெய்வமில்லை, சிவஞானசித்திக்கு மேற்சாத்திரமில்லை" எனப் பழமொழி வழக்கினும் கூறியிருக்கின்றன.

இதனை மதுமாம்சபக்ஷணிக ளல்லாத நற்குண நற்செய்கைகளையுடைய சற்சைவர்களே ஓதலு மோதுவித்தலும்வேணடும். இதனையோதியுணரும்பொழுது சிவதீக்ஷாவானகளாய் பக்திசிரத்தையுடனோதியுணாவாராயின் மோக்ஷவீடடைதல் சத்தியம், சத்தியம், சத்தியம்.

## நூலாசிரியர் வரலாறு.

* அருணந்திசிவாசாரியாா திருத்துறையூரில் ஆதிசைவர்குலத்திலவதரித்து வேதாகமங்களை யோதியுணாந்து அக்காலத்துள்ளகல்விமான்களாற் சகலாகமபணடிதரெனப் பெயர்பெற்றுச்செருக்குற்றிருந்தனர்.

அக்காலத்தில் திருப்பெண்ணாகடத்தில் வேளாளர்குலத்தில் திருவவதாரஞ்செய்து திருவெண்ணெய்நல்லூரில் நன்மாமனார்வீட்டில் வளர்ந்துவருஞ் சுவேதவனப்பெருமாளென்னும் மெய்கண்டதேவர், ஐந்துவயதிற்குள் அவ்வூரிலெழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையாரிடத்தில் வேதசிவாகமாதிகளை யோதியுணாந்திருந்தனர்.

அருணந்திசிவாசாரியார் திருவெண்ணெய்நல்லூரிற்சென்று தமதுசிஷ்யவர்க்கங்களுக்கு 'வேதசிவாகமாதிகளைப் பாட

மோதிவருநாளில், சிஷ்யவர்க்கங்கள் நாளுக்குநாட் குறைந்
து தம்மிடத்தில் வராதிருப்பதைக்கண்டு யாதுகாரணமெனவி
னவுகாலையில், யாவரும் மெய்கண்டதேவர் ஐந்துவயதிற்குள
பொல்லாப்பிள்ளையாரிடத்தில வாசிக்கப்பெற்று யாவர்க்குஞ்ச
ந்தேகவிபரீதமற வேதசிவாகமாதிகளைக் கற்பித்துவருகின்ற
னரெனக் கேள்வியுற்றுச் சந்தேகமடைந்து சிஷ்யவர்க்கத்
துடன் மெய்கண்டதேவர்வீற்றிருக்குமிடத்திற்குச் சென்றன
ர். அதுகாலையில் மெய்கண்டதேவரிடத்தில் தம்மிடத்தில் வ
ராதிருக்கும் சிஷ்யர்களியாவரும் வாசித்துக்கொண்டிருந்தன
ர். அருணந்திசிவாசாரியாரவரை அவ்விடத்துற்ற மாணாக்கர்
கள்கண்டு பிரதமாசாரியரானதால் எழுந்து வந்தனவழிபாடுக
ள்களைச்செய்ய மெய்கண்டதேவர் தலைகுனிந்து மௌனமுற்
றிருந்தனர். அருணந்திசிவாசாரியார் மெய்கண்டதேவர் தமக்
குமரியாதைசெய்யாது பராமுகராயிருப்பதைக்கண்டு கர்வித்தி
ருந்தனர். மெய்கண்டதேவர் மாணாக்கர்கள் மீண்டும் வாசிக்
கத்தொடங்க அப்பொழுது ஆணவமலத்தினது பிரசங்கம்வந்
தமையால் அருணந்திசிவாசாரியார் மெய்கண்டதேவரை ஆண
வமல மெத்தன்மையை யுடையதென உலாவிக்கொண்டே வி
னவ மெய்கண்டதேவர் அருணந்திசிவாசாரியாரது வாசிப்பின்
தேர்ச்சியும் அதனாலவரடைந்திருக்கும் கர்வத்தையுங்கண்டு கு
றிப்பாய் அவரைநோக்கிப் பார்த்தருளினர்.

மெய்கண்டதேவர் சிவானுபூதிச் செல்வரானதினாலும்,
அருணந்திசிவாசாரியார் கல்வித்தேர்ச்சியான் அதிதீவிரபக்குவ
மடைந்திருந்தமையாலும், மெய்கண்டதேவர் தம்மைச்சுட்டி
ய குறிப்பறிந்து, தாமிப்பொழுதடைந்திருப்பது ஆணவமலமெ
ன வுணரப்பெற்று, உடனே அஞ்சுதலுற்று, மெய்கண்டதேவ
ரடிக்கண்வீழ்ந்து தமக்கு ஞானநுக்கிரகஞ்செய்யும்படி வேண்

டிக்கொண்டனா. மெய்கண்டதேவ ரவ்வாறேயநுக்கிரகித்துத் தம்மிடத்திருநத வடமொழிச் சிவஞானபோதமும் அதற்குத் தாம் செய்தருளிய தென்மொழி வார்த்திகப்பொழிப்பையுங் கொடுத்தருளினா.

அருணந்திசிவாசாரியாா வடமொழியினும் தென்மொழியினும் மெய்கண்டதேவரடியார்கள் நாற்பதுதொன்பதின்மருள் மிகுந்தபயிர்ச்சியுடையராய் தமது ஆசிரியராற்றந்த சிவஞானபோதத்திற்கு லோகோபகாரமாய் வழிநூல்செய்து சிவஞானசித்தியாரெனப் பெயரிட்டருளினர்.

சிவஞானசித்தியார் பரபக்ஷ சுபக்ஷமென
விரண்டுபிரிவையுடையது.

பரபக்ஷம்.

"முகவுரையிற்றசமெழுமூன்றதன்முப்பானொன்று
மூதுலகன்முப்பானொன்றெண்ணைந்தாம்புத்தன்
இகழ்மூவர்க்கோரொட்டாறிகண்டனுக்கெட்டீரேழ்
சேவகனுக்கீரைந்தோடிருமூன்றும்பாட்டன்
பகர்பதின்மூன்றீரைந்தேபாகரனீரிரணடாம
பரிணாமநான்கிருநான்கேமாயாவாத
நிகழைம்மூன்றறுமூன்றும்பாற்கரியற்கேழா
நிரீச்சுரற்குச்சதுராத்திரியெழுமுப்பானொன்றே."
என்னுந்தொகையையுடையது.

சுபக்ஷம்.

"ஐந்துதுதியீரேழுமளவையாகு
மாறிதனிலெழுபதுபின்தொண்ணூற்றாறு
மந்துசதுட்டயநாற்பானவமும்பின்னவமு
நவிநான்குநாள்பதினிவொன்றிழிந்திருறும்

கந்தன்முகமோராறுகரமங்கீராறுங
கருதிடுவெங்கணபதியைங்கரமுமிருபதமுஞ்
சிந்தையிலைமூவொன்பதோடுமுன்னூறுஞ்
சிவஞானசித்திசுவபக்கமெனத்தெளியே.''

என்னுந்தொகையையுடையது.

## இந்நூலை தமிழிலியற்றவேண்டுங்காரணம்.

சீராகயிலைத்திருவாய்மலர்ந்தசிவாகமங்கற்
றாராய்வதுவடசொற்பயின்றாக்கெளிதம்மொழியைச்
சாராதவருமத்தத்துவஞானந்தலைப்படுதற்
கோரார்தமிழ்ச்செய்யுளான்மயறீரவெழுதுவனே.

## உரையாசிரியர்களின் பெயர்.

இந்நூலிற்கு உரையாசிரியர்களின்பெயர் பெரும்பாலும் பிரதிகளி லில்லாமலே யிருக்கின்றன. சிலபிரதிகளு ளிருப்பினும் அவர்கள்சரித்திரங்களொன்றுங் காணப்படவில்லை. பரபக்கத்திற்கு திருவொற்றியூர்ஞானப்பிரகாசரும், அவர்மாணக்கர் தத்துவப்பிரகாசரும், வேலப்பபண்டாரமும்உரையிட்டபிரதிகள் எனக்குக்கிடைத்திருக்கின்றன. வேலப்பபண்டாரமுரையில் அவர்பெயர் காணப்படவில்லை, வாசித்தோரா லவருரையெனச் சொல்லக்கேள்வி. அவருரைபேதங்களை யிந்நூலிற்குறிப்பிட்டவிடத்தில் மற்றோருரையாசிரியரெனக்குறிப்பிட்டிருக்கின்றனன். ம-ா-ா-ஸ்ரீ, அருணகிரிப்பரதேசியாரால் கொடுத்தபிரதியும், உபாத்தியாயர் பு. தெய்வசிகாமணிமுதலியாரால் கொடுத்தபிரதியும், இன்னுஞ்சிலரால் கொடுக்கப்பட்டபிரதிகளு மொன்றாயிருந்தன. அருணகிரிப்பரதேசியார் இப்பிரதியை மறைஞானதேசிகர்பிரதியெனக்கொடுத்தனர். பிரதிகளில் தத்துவப்பிரகாச

ருரையெனக் கண்டிருக்கின்றன. ம-ா ா-ஸ்ரீ, பு - பொன்னம்பலம்முதலியாரால் கொடுத்தபிரதி திருவொற்றியூர் ஞானப்பிரகாசருரை. இவ்வுரையை விருத்தியுரையெனச் சொல்லக்கேள்வி. வேறுவிதவுரைகள் பரபக்ஷத்திற்குக் காணப்படவில்லை.

சுபக்ஷத்திற்கு மறைஞானதேசிகர், சிவாக்கிரயோகியர், நிரம்பவழகியர், திருவண்ணாமலையாதீனம் யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசர், சிவஞானத்தம்பிரான் முதலானவர்களுரையிட்டிருக்கின்றனர். இவைகளில் சிவஞானத்தம்பிரானுரைநீங்கலாக மற்றையபிரதிகளெனக்குக் கிடைத்திருக்கின்றன. அவ்வுரைகளில் உரையாசிரியர்கள்பெயர் தெளிவாய்க் காணப்படுகின்றன. ஒவ்வோருரைகளிலும் இரண்டுமூன்றுபிரதிகிடைத்திருக்கின்றன. சிவஞானத்தம்பிரான் ஞானப்பிரகாசருரைக்கு மறுப்பொன்றெழுதியிருக்கின்றனர். அதனைச் சிவசமவாதமறுப்பென்றெழுதியிருக்கின்றது. இதற்கு ஞானப்பிரகாசர்மாணாக்கர்களிலொருவர் மறுப்பின்மேற்கண்டனம் அல்லது வஜ்ஜிரதண்டமென வோர்மறுப்பெழுதியிருக்கின்றனர். இம்மறுப்புகள் ஒவ்வோரபிமானவகையாலுண்டாயினவன்றி முதனூற்கருத்திற்கும் உரைக்கும் ஞானப்பிரகாசருரை மிகவும் ஒத்தேயிருக்கின்றது. ஞானப்பிரகாசர்முதலிய சுபக்ஷவுரையாசிரியர்கள் சரிதவரலாற்றையும், அவர்களுரைபேதங்களையும், மறைஞானதேசிகர் சுபக்ஷவுரை யச்சிட்டுவருவதால் அதிற்றெளிவாய்க்காணலாம்.

---

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானசித்தியார்பரபக்ஷம்

## மூலமும்-உரையும்.

### விநாயகர்வணக்கம.

ஒருகோட்டனிருசெவியன்மும்மதத்தனால்வாயைங்க ரத்தனாறு, தருகோட்டம்பிறையிதழித்தாழ்சடையான் றருமொருவாரணத்தின்றாள்க, ளொருகோட்டன்பொடும் வணங்கியோவாதேயிரவுபகலுணர்வோர்சிந்தைத், திரு கோட்டுமயன்றிருமால்செல்வமுமொன்றோ வென்னச் செய்யுந்தேவே.

(இ-ள்.) (ஒருகோட்டன்—தேவே.) எ-று. கங்கையாறுங் கோணுதலைத்தருமழகியபிறையுங் கொன்றைமாலையுமுடைத் தாய்த் தாழ்ந்தசடையினையுடையபரமேசுரன் பிள்ளையாகத்தந் ததேவன், ஒருகொம்பையு மிரண்டுசெவியையு மூன்றுமதத்தை யு நான்றவாயையு மைந்துகரத்தையுமுடையோனாகிய வொப்ப ற்றயானையினது தாள்க ளுள்ளமுருகுதலைச்செலுத்துவதாகிய வன்பொடுகூடி வந்தித் தொழியாதிரவும்பகலு [illegible] புத்தியிற்றிருக்கை யீண்டனுகாதபடி தாக்கு [illegible]விஷ்ணு க்கள்பதமு மொன்றல்லவென்னும்படி மிக்க[illegible]பத்தையு முண்டாக்குமென்றவாறு. கோடுஞ் செவியு மதமும் வாயுங் க ரமு மஃறிணைப்பொருளாகிய யானையின் [illegible]னைப்பெயர்களாயி

னு மவ்வியானைபபடிவத்தையுடையன்றேவனுதல்பற்றிச் சினை தோறு மன்னிறுதியடுகெகிக்கூறினர்.

இச்செய்யுள் விநாயகாவணககங்கூறிற்று. விநாயகன் தன க்குநாயகமில்லாதவன். (க)

உருகோட்டன்பொடுவணங்கி. எனபதறகு. மிகுநதபத்தி யொடுங்தாழ்ந்தவணககத்தினுலே யடையபபப்பட்ட சிவதீக்ஷா வான்களாய். எனவும், உணாவோா. எ-கு. அநதப்பாதத்தியாக முன்னுகச் சிவத்தியாகம்பண்ணுவோர். எனவும், சிந்தைத்திரு கோட்டும். எ-கு. அந்தச்சிவத்தியாகத்துவாரத்தினுலே சிற்சத் தியின துவிரிந்தவறிவுதொழில்களை மறைத்தமலசத்தியினது வி யாபாரத்தைத்தடுத்து அதனுற்பண்ணப்பட்டவஞ்ஞானத்தை த்தூரத்தும். எனவும், அயன்றிருமால் செல்வமுமொன்றோவெ னன. எ-கு. பிரமத்துவம் விஷ்ணுத்துவமென்கின்ற ஐஸ்வரிய மும் ஒருபொருளோவென்ன. எனவும், செய்யுந்தேவே. எ - கு. (தேவேசெய்யுமெனமாறி) தேவாந்தன்மையைச்செய்யுமென்று ம் அஃதாவது, முன்னிருந்தசிவத்துவத்தைத் தானேவிளக்கி த் தனித்தனியவர்களைச்சிவன்களாகத் தானேபண்ணும். எனவு ம், முத்திவியத்தி இரண்டுமோக்ஷமென்கையால் திருகோட்டு மெனறதனுல் பாசமுத்தியும், செய்யுந்தேவேயென்றதனுல் சிவ த்துவாபிவியத்தியுஞ்சொல்லபபட்டதெனவும் கூறினூ, காரு ண்ணியமூர்த்தியாகிய திருவண்ணுமலையாதீனத்துத்தம்பிரான், ஸ்ரீமத்யாழ்ப்பாணம்ஞானப்பிரகாசத்தம்பிரான், தனதுசுபக்ஷத் தருமைத்திருவுரையினும்.இவ்வுரை நுட்பமதியாளர்க்கன்றிமந்த மதிகட்குத்தோன்றுவதரிதாயினுங்கற்றுணர்ந்தோர்பாற்கேட்ட றிந்துக்கொள்ளக்கடவர். அஃதன்றிச்சிலரிவ்வுரையின்கருத்தறி யாதுஉணாவாகிபபதுகடினமெனவோ,அல்லதிவ்வுரையைத்தெரி

விக்கும்ாசானில்லாமையோ, சிவசம்வாதிகோட்பாடெனக்கூறிம றுகின்றார்கள். சாதகரிவ்வாறுகூறுவதுபெரிதாகியமடமையே பரபக்ஷத்திற்குரையியற்றியஞானப்பிரகாசரும்செய்யுந்தே வே.,, எ-கு. இதுவேகருத்தாய்க்கூறியதை யவருரையார்காணக.

இவ்விரண்டுரையாசிரியாகருத்துக்களையும் இந்நூற்குரை யியற்றியயேனையவாசிரியர் கோட்பாடுகளையும் பரபக்ஷசுபக்ஷங களில் வேறுபட்டவிடங்களில் விசேடித்தவிடங்களி லாங்காங் கெடுத்துக்காட்டப்படும். இவ்வுரையாசிரியர் சரித்திரங்களை யிந் நூன்முகவுரையிற்காண்க.

---

சிவவணக்கம்.

ஆதிநடுவந்தமிலாவளவில்சோதியருண்ஞானமூர்த்தி யாயகிலமீன்ற, மாதினையுமொருபாகத்தடக்கிவானோர் மகுடசூளாமணியாய்வையம்போற்றப், பாதிமதியணிப வளச்சடைகடாழப்படரொளியம்புலத்தாடும்பரனாபா தந, தாதுமலிதாமரைகள்சிரத்தேவைத்துத்தளராதபே ரன்புவளராநிற்பாம். (க)

(இ-ள்.) (ஆதிநடுவந்தமிலா—வளராநிற்பாம்.) எ-து. முத னடுவிறுதியின் றொருவராலுமறியப்படாத பரசொரூபப்பிரகாச த்தையுடைய வருளாகியஞானமேதிருமேனியாகக்கொண்டு தன துகாருண்ணியத்தினாலே சகளீகரித்துப் பிரபஞ்சத்தையுமுண் டாக்கிய வந்தபபரமேஸ்வரியையுக் தன்னிடப்பாகமுழுதினுமட கிப் பிரமவிஷ்ணுக்கண்முதலாகியதேவர்களுக் கவரதுமகுட ரத்திகம்போலு மிக்கசத்திசிவமாகியசகளநிஷ்களசொரூபமா யுல கத்துள்ளார் துதிப்ப வர்த்தசந்திரனையலங்காரமாகவணிந்த பவ ளம்போன்றசடைகளைத்தாழவிட்டு விரிந்த வொளியையுடைய

திருவம்பலத்தின்கண்ணே நிருத்தஞ்செய்தருளுகின்ற மேலான சிவனது ஸ்ரீபாதங்களாகியதாதுக்கண்மிக்க தாமரைகளைத் தலையின்மீதுவைத்துத் தளர்ச்சியில்லாதமிகஅன்பு மிகவும்உண்டாம்படிநில்லாநின்றேம். எ—று. பூமிக்குச்சுழுமுனை திருவம்பலமாகையான் மற்றொருதலமநவரததாண்டவத்துக்குப பொருந்தென்பதுகருத்து. திருமூலர்திருமந்திரம்:— "தத்துவமாடச் சதாசிவனாடச், சித்தமுமாடச் சிவசத்திதானாட, வைத்தசராசரமாடமறையாட,வத்தனுமாடினா னானந்தக்கூத்தே.", தானாடத்தன்தசையாடுமெனபதுகருத்து, அட்டமூர்த்தமாகையால்.

இச்செய்யுள் சிவவணக்கங் கூறுமுகத்தான் அச்சிவம் உருவமும் அருவமும் உருபாருபமென்னு மூன்றுதிருமேனியுமல்லவென்பது கூறிற்று. (க)

---

ஆதிநடுவந்தமிலாவளவில்சோதியருணஞானமூர்த்தியாய எ-து. (சோதியாய் அருளமூர்த்தியாய்ஞானமூர்த்தியாய்என் றுபிரித்துமூன்றிடத்துங்கூட்டுக. ஆதிநடுவந்தமிலாவளவில்சோதியாய் எனபதுஆகுபெயராதலால்) சோதியாய்,எ-து.உற்பத்திதிதிநாசங்களினதுபசாரத்துக்குந்தூரமாய் மனோவாக்கதீதமாகியசுத்தசிவசோதியாகி அதனதுமத்தியநிஷ்களமாத்தசோதியாய். ஆகையால்,சகளாதிகாரமொன்கின்றசதாசிவன், சகளநிஷ்கள்போகமொன்கின்றவகாகதசிவன்,நிஷ்களவிலையொன்கின்றபரசிவன், இவர்கட்கதிதமாய்.ஆகையால்,மகாப்பிரளயத்திலேதான் யோகவிவேகபாவனையிலேதான் அணுபக்ஷமாகியபிரமாதிபரசிவாந்தமாகிய அதிஷ்டானங்களைவிட்டுச் சிவனிடத்திலுன்முகமாய்த்திரும்பிய சம்புபக்ஷமாகியபிரமா விஷ்ணு ருத்திரன் மகேஸ்வரன்சதாசிவன் பரவிந்து பரநாதம் பராசத்தி பரசிவமெனநின்ற நவதத்துவவிலையத்தானமாய்த் திரும்பச்சகளாநிர்த்தம்பண்ணும்படி,—அரு

ண் மூர்த்தியாய்.எ-து.மகாமாயாமயமகாசபாபித்தியில் மாந்திரிக னெழுதியபூதாகாசவடிவாகிய மந்திரலிபியெனுமிலக்கில் மாந்தி ரிகனுச்சரிக்குமந்திரகரிவழாயாய்வந்தக்கிபோலாவிற்பவித்துத்தி வ்வியமந்திரமாகிபபலன்கொடுக்கும்படிசிவனதுசஙகற்பத்தாலு ண்டாயச்சத்தியசுத்தசம்மேளனமாகிச் சுத்தமாயாபுவநவாசிக ளாகியசாரூபிகளுககுச் சததியவடிவாயுமிருக்குமாந்திரிகனது ச ங்கற்பத்தாற் கற்பிதசம்மேளனமாகிச் சிவனுக்குக்கற்பிதவடி வாயுமிருக்கும் வாசகமந்திரமாகியபஞ்சதசாக்ஷரிபஞ்சாக்கரமா கித் தனதுபரிககிரகசத்தியாயிருககின்றவாசகசத்திமயசரீரத் திலாவிற்பவித் தவினுபூதமாயிருககின்ற வாச்சியமந்திரமாகிய பஞ்சதசாக்ஷரிபஞ்சாககரமாகித் தனதுசமவேதசத்தியாயிருக்கி ன்றவாச்சியசத்திமயசரீரியாய். ஆகையால்,—ஞானமூர்த்தியாய். எ-து.சலேயாயிருககின்றஜடமூர்த்திகட்குவேறாய்அசலேயாயிருக் கின்றசித்தநுவாய். இப்படிகற்பிதமூர்த்திக்குக்காசாரணுதிகளின தசைவுகூடாதாகையால்,— அகிலமீன்றமாதினேயுமொருபாகத் தடக்கி. எ-து.அகிலமீனற.எ-து. பாரம்பரியமாய்ப்பராசத்தியா லதிஷ்டிக்கபபட் டந்தபபராசத்தித்துவாரத்திலுலேயுந் தன்னு லேசாக்ஷாத்அதிஷ்டிக்கப்பட்ட பிரமாதித்துவாரத்திலுலேயுந் தநுகாணபுவநபோகங்களாகியசகலத்தையும்உற்பவிபபித்த,— ஒருபாதத்து. எ-து. வாமபாகத்து;—மாதினேயும். எ-து. நிர்த் தசாக்ஷியாய்நிற்கும்உமாதேவியையும் நிர்த்தசாக்ஷியாய்த்தனது சத்திசாந்நித்தியத்தானமாய்மின்றநிலேநிற்கவும் ஓரங்கசத்திறு லே,—அடக்கி.எ-து. சமுத்திரத்துதித்தமுத்துப்போல வநந்த த்துவாரத்திலுலே மாயையினுற்பவிப்பித்துத் தனதுசம்மேள னசக்கிரவிக்கிரகத்திலாவித்பவிபபித்த ஸ்ரீகண்டமூர்த்தியிற்பிர வேசிப்பித்து சம்மேளனமாகத்திரும்பவதிற்றுனுஞ்சாந்நித்திய மாய்,—வானோர்மகுடகூடாமணியாய்.எ-து. பிரமாதிதேவர்க்கு

மதிதேவராகியஸ்ரீகண்டாதிதேவர்தேவராகிய அநந்தாதிகட்குரு தேவனாய்,—வையம்போற்ற.எ-து உலகங்களெல்லாந்துதிப்ப;-- பாதிமதியணிபவளச்சடைகடாழ.எ-து (பாதி.எ-து சமபாகமன் றுஓரங்கிசமாதலால )சந்திரகலையைத்தரித்தவிரித்தபவளக்கொ டிபோன்ற சடைகள்பின்றூங்க,—படரொளியம்பலத்து எ-து. பராசத்தியாலதிட்டிக்கப்பட்டபேரம்பரின்றபிரகாசத்தையுடை யசுத்தமாயாமயமாகியசபையின்கண்ணே,— ஆடும். எ-து.நடி க்கும்,—பரனார். எ-து. சுத்தசிவனாரது,— பாதத்தாதுமலிதா மரைகள்.எ-து.பாதாரவிந்தங்களை,— சிரத்தேவைத்து. எ-து. சென்னியிற்றரித்து,— தளராதபேரன்புவளராநிற்பாம். எ-து. யாமநீங்காதமிகுந்தபத்திநிறைவாகக்காநிற்பாம்.எ-று.யாம். எ-து. தோன்றாயெழுவாய.

இவ்வுரைதிருவண்ணாமலையாதீன ஞானப்பிரகாசத்தம்பிரா னார்கூறியது.

---

## சிவசத்திவணக்கம்.

ஈசனருளிச்சையறிவியற்றலின்பமிலயமொடுபோகம
திகாரமாகித், தேசருவமருவுருவமுருவமாகித் தேவியு
மாய்த்தேசமொடுசெல்வமாகிப், பேசரியவுயிரையெலா
ம்பெற்றுநோக்கிப் பெரும்போகமவையளித்துப்பிறப்பி
னையுமொழித்திட், டாசகலுமடியருளத்தப்பனுடனிருக்
குமன்னையருட்பாதமலர்சென்னிவைப்பாம். (உ)

(இ-ள்.) ஈசனருளிச்சையறிவியற்றலின்ப மிலயமொடு போகமதிகாரமாகி. எ-து. கருத்தாவைவிட்டுநீங்காத சத்தியான தவனதுதிருவுள்ளத்தாலே பராசத்தியு மிச்சாசத்தியு ஞானசத்

தியுங் கிரியாசத்தியுந் திரோதானசத்தியு மிவையுமன்றிச் சஙகாரதேோடுதிதிசிருட்டிகளுமாய்,—தேசருவமருவுருவமுருவமாகி தேவியுமாய்தேசமொடுசெலவமாகி. எ-து. அந்தப்பிரகாசமாகியகர்த்தாவுககு அரூபம் ரூபாரூபம் உரூபமெனபபட்டமூன்றுமுறைமைககும்முறைமைகளாகியவடிவுநதானுய்க் கத்தாவபடிகவொணடருளுநதிருமேனிக காதநதசசத்திகளுந்தானுயபிரபஞசஙகளும்பதார்த்தங்களுநதானுய்,— பேசரியவுயிரையெலாமபெறறுநோககி. எ-து.காததாவெடுததுககொணட திருமேனிககேறற சத்தியாயின் றெண்ணுதறகரிதாகியசாவான்மாககளையும் படைத்தளித்து,—பெரும்போகமவையளித்துப்பிறபபினையுமொழிததிட்டு எ-து.ஆன்மாககளசெய்தபுணணியபாவஙகளுககீடாக சொாககாதிபதங்களையுஙகொடுததுஜநநங்களையுஙகெடுத்துக் கர்த்தாவோடுங்கூடிநின்று முத்தியையுங்கொடுத்து,—ஆசகலுமடியருளத்தபபனுடனிருக்குமன்னை. எ-து. அஞ்ஞானநீஙகினவடியாரிதயத்தினுங காத்தாவோடுஙகூடியிருககு மூலகமாதாவினுடைய,— அருட்பாதமலர்சென்னிவைப்பாம். எ-து. கிருபையாகிய திருவடிததாயமரைகளை யெந்தலைமேல் வைததுககொளளாநினறேம். எ-று. அதிகாரமும் செல்வமும் தேசமும்,பெற்றும் நோககியும் பெரும்போகமளித்துமென உம்மைநோக்கிநின்றது.

இச்செய்யுள் சிவசத்திவணக்கங்கூறுவான் கர்த்தாவுடைய லீலைகளெல்லாஞ் சத்தியேகருவியாய்நிற்குமென்பதுகூறிற்று. பிரபஞ்சத்தோற்றத்துக்குச்சத்தியுபாதானமென்றதன்று. (உ)

---

பிரபஞ்சத்தோற்றமுபாதானமென்றதன்று,கடன்கட்குககுலாலன்மாத்திரமென்றதெனவும்; தோற்றஞ்சிவனிடத்திலென்னி

ல் மகாவிரதிகள்மதமாமெனவும்;விசேடித்தெடுத்துக்காட்டினர் பரபக்ஷத்திற்குரையியற்றியஞானபிரகாசர்.

ஓதனத்தினதுபாகஞ் சாத்தனதுபாகமென்கின்றதுபோலக கர்த்தாவாகியசிவனுற் கன்மமாகியஜடசித்துககளிலே கிரியையாகப்பண்ணபபடுகையால் சிவனதுசிருஷ்டி திதிசங்காரம்திரோபாவம் அநுக்கிரகம், ஜடசித்துகளதுசிருஷடி திதி சங்காரம் திரோபாவம்அநுக்கிரகமென்றுஞ்சொலலபபடுமென்றறிக.(ஆகிஎன்பதனைப்பிரித்தெங்குங்கூட்டுக. ஈசனுககு அருளாகிஅருளென்பதாகுபெயராதலால்.) அருளாகி. எ- து சிததாகியவான்மாவினிடத்திலேசிவனுக்கொபபாகுமுத்திசிததிககும்பொருட்டு மலநீங்க முன்றடைபட்டிருந்தபேரறிவுபெருநதொழிலாகிய சிவத்துவவிருத்திவிளக்கமென்னுமருளை அநுககிரகத்தைதபபண்ணும்பராசத்தியாகி,— இன்பமாகி. எ-து. கிரமத்திலேபேரின்பமாவதாய் அந்தப்பேரின்பத்துக்குக்காரணமாகுஞ் சிற்றின்பத்துக்குநிமித்தமாகியசிருஷ்டி திதி சங்காரம் திரோபாவமென்கிறகாலுகிருத்தியங்களைஆரணி ஜநநீரோதயித்திரிரூபமாயிருந்து பண்ணுந்திரோதான்சத்தியெனனுமாதிசத்தியாகி. (பரசிவாதீதமாகியசிவனுக்கின்பத்தைதப்பண்ணும் பராசத்தியதீதமாகியவின்பசத்தியாகியயென்றும்தொகைப்பொருளுமாம்.)இபபடிப்பஞ்சகிருத்தியம்பண்ணுமிடத்து நியமித் தறிந் துத்தியோகித்துச் சங்கற்பித்துப்பண்ணவேண்டுகையால்,—இச்சையாகி. எ-து. இந்தப்பொருளிப்படியாம் இந்தப்பொருளிபபடியாகாதென்னு நியமத்தைப்பண்ணுமிசசாசத்தியாகி,— அறிவாகி. எ-து. இதுகாரண மிதுகரண மிதுகாரிய மிதுபிரயோசனமென்னுஞ்சாத்தசவிகறபஞானத்தைதப்பண்ணுஞானசத்தியாகி,—இயற்றலாகி. எ-து. கிரியாசத்தியாயிருக் கிதைகான்பண்ணுகிற்பேனென் றுத்தியோகித்த

லாகிய சாத்தசவிகற்பக்கிரியையைப்பண்ணித் திரும்பவிச்சாசத் திருபமாகியிருந திருதவஸ திபபடியாகக்கடவதென்று சங்கற்பத் தைப்பண்ணும் கிரியாசத்தியாகியாநதத்தூலபஞ்சகிருத்தியங்களை யும அந்ததூலபஞசகிருத்தியஙகளுககு யோககியத்தைப்பண் ணுமதாகியசூககுமபஞசகிருத்தியஙகளையும் பண்ணுமிட த்தில்இ லையபோகவதிகாரகாலஙகளிலேபணணவேணடுமதாகையால்,— இலையமொடுபோகமதிகாரமாகி.எ-து.இலையபோகவதிகாரங்களு ககுள் இலையத்தைசசொல்வாம். (அரத்தமாத்திரயோசனநிர்விக ற்பக்காட்சி, பிரத்தியர்த்தக்காட்சிமாத்திர சவிகறபபபார்வைபா ரகுஞ்சுத்தசிவன்போலிருந்தாலும் போகரையு மதிகாரரையு ம நுககிரககிருத்தியமாத்திரஙகுறித் ததிருக்குமிப்பித் துள்ளைத் ததிருககுமயோசனசாததசவிகறப ஞானககிரியாசங்கற்பவாளு யிருககின்ற விந்துவைநீங்காதவிலையருககு மூத்திபண்ணுமநுக் கிரககிருத்திய மப்படியிருக்கும். விந்துவைநீங்கியவிலையருககு வி யத்திபண்ணுமநுக்கிரகிருத்திய மெபபோதுமியற்கையாயிருக கினறதாகிலுந்தூலபஞ்சகிருததியத்துக்கு யோக்கியத்தைப்பண் ணுமதாகிய சூக்குமபஞ்சகிருத்தியத்தைப்பண்ணும்படி இலைய காலத்திலேபோகரையும் அதிகாரரையுஞ்சூக்குமிபபித்துளவைத் துச்சிருஷ்டிகாலத்திலேதானவர்க்குள்ளுமாயிருப்பர்,இலையாத லால்அந்தமுத்திவியத்திகிருத்தியமுமுடித்துத் தூலபஞ்சகிருத் தியநிமித்தமாகிய சூக்குமபஞ்சகிருததியத்தையும்பண்ணுவர்.ஆ கையால், மகாபபிரளையத்திலே தூலபஞ்சகிருத்தியங்களைவிட்டி ருக்கும்கிரியாசத்திக்குச் சூக்குமபஞ்சகிருத்தியநிமித்தஞ் சூக்கு மித்து நியமித்தல் சறமேசவிகற்பித்தறிதல் அப்படியுத்தியோகி த்தல் நிரவிகறபசவிகறபவேற்றுமைதோற்றச்சங்கற்பித்தலென் னுந் தொழில்களைப்பண்ணுமிச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத் தி அந்தக்கிரியாசத்திபேதமாகிய விச்சாசத்திகளை யக்கியமன்றி

த்தனக்குள்வைத்துநிர்விகற்பவறிவுமாத்திரத்தைதபபண்ணு ஞானசத்திமாத்திரமாயிருத்தல்இலையம்.) (போகத்தைச்சொலவாம. அநதககிரியாசத்திககுசசிருஷ்டியாதிதூலபஞ்சகிருத்தியஙகளைபபணணும்படி நியமிததல அறிதல உத்தியோகித்தலெனனுநதூலயோசன பவுத்தசவிகற்பவேற்றுமைதோற்றுஞ் சூககும யோசனசாத்தசவிகற்பத்தொழில்களின துளளுததிரோகத்தை பபண்ணி இச்சாசத்தியாயு ஞானசத்தியாயுங் கிரியாசத்தியாயுமிருததலபோகம்.)(அதிகாரதலைதச்சொல்வாம். அநதககிரியாசத்திககுசசொல்லிய சாத்தசவிகறபநிாவிகற்பவேறறுமைதோற்றுஞ்சூக்குமயோசனசாத்தசவிகறபசங்கற்பத்தினது அந்தர்ருத்திரோகதலைதபபணணிக் கிரியாசத்தி பேதமாகிய விச்சாசத்தியாயிருததலதிகாரம்.)ஆகையாற்றன்னைக்குறித்துபபிரபஞ்சம்பிரயோசனமாகததோற்றாதாதலாற்றன்னைக்குறியாமற் பிரபஞ்சத்தைசொரூபமாத்திரமாகபபார்த்தலைபபணணுவது, "ஆதிநடுவநதமிலாவளவில்சோதி." என்றுமுன்சொல்லியதுசுததசிவசசுபாவம. பிறர்பிரயோசனத்தைதகுறித்துபபார்த்தலைப பணணுதலைச்செய்வதிபபோதுசொலலியவிலையபோகஅதிகாரச்சிவசசுபாவம்.இந்தவிலையபோகஅதிகாரச்சுபாவமும்சர்வகருத்திருத்துவத்துக்குட்சிறப்புககருத்திருத்துவமாதலாலஔபாதிகநடத்தலக்ஷணமன்று, நிருபாதிகமிருவகையொருவகைச்சுபாவமும்சருபலக்ஷணமே.ஆதலால்,இந்தவிலையபோகவதிகாரங்கள் விருத்தி பரிணதி விவர்த்தாரம்பங்களினென்றாகிய நித்தியங்களசோபாதிகங்கள் சத்தியங்களன்று, பகிரங்கபேதமாய்ப்பிரித்தற்கரிதாகி அந்தரங்கபேதமாயிருக்கின்றசிவபேதமாயும் சிவசத்திபேதமாயும் சிவசத்திவியாபாரபேதமாயுமிருத்தலால் வியாபாரங்கட்கு இலையபோகவதிகாரமென்னு மந்தரங்கபேதமுண்டு,சிவனுக்குஞ் சிவசத்திக்குமில்லையென்றுசொல்லப்படாது; காரணபேதமில்லாதிருந்தாற் கா

ரியபேதமில்லையாதலால்சிவ சிவசத்தி சிவசத்திவியாபாரங்களமூன்றிறகுந தனித்தனிஇல்லையபோகவதிகாரஙகள பிரித்தலில்லாதவாதரஙகபேதமாயும் பகிரஙகத்தபேதமாயும் நித்தியஙகளாயுஞ் சததியஙகளாயு மிருககும்; கறபிதமூாத்திவடிவுமாததிரத்தாற கறபிதவநித்தியஙகளாயு மசத்தியஙகளாயு மிருக்குமெனவறிக. விநதுவுககும வைகதவசரீரிகட்குமாத்திரம் இல்லையபோகவதிகாரஙகளபிரித்தறகெளிதாகிய பகிரங்கபேதமா யச்சற்காரியத்தாலநித்தியங்களாயு மனுமூர்த்திவடிவுமுதற் காரியமாத்திரத்தா லநித்தியங்களாயு மசத்தியங்களாயுமிருககுமெனவறிக. திருமப விலையபோகவதிகாரககிரமங்களிலே;— தேசருவமருவுருவமுருவமாகி. எ-து. சோதியாம்நிஷ்கள சகளநிஷ்கள சகளமாகிப பின்னுமதிகாரததுககுப புறமபுமுள்ளுமாயிருககும் பரசிவனுலு மநாகதசிவனுலு மோர்கலையிரிருககலைக்கிரமத்திலே யதிஷ்டிககபபட்டசாந்தியாதீதை சாநதி வித்தை பிரிதிட்டை நிவிர்த்தியென்னுங்கலைகளிலவிழுநது பஞசசாதாககியங்களையும் பஞசமூாததிகளையு மிநதவிருகலபபினுளள பஞசப்பிரமஙகளையு முற்பவிபபிக்கும்அலகாரியபராசததி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்திகளுமாகிப, பின்னும்ஈசானியாதிமூாத்தியநதமாகியபஞ்சசத்திகளுமாகி வாமாதிசாவபூததமனியநதமாகியவஷ்டசத்திகளுமாகிப், பின்னுமனோனமனியாதிசர்ஸ்வதியந்தமாகியபஞ்சசத்திகளுமாகி,—தேவியுமாய்.எ-து.போகசத்தியுமாய்,—தேசமொடுசெல்வமாகி. எ-து. யோகசத்தியொடுவீரசத்தியுமாகிப பின்,—பேசரியவுயிரையெலாம்பெற்று. எ து. எண்ணிறந்தவான்மாக்களுக்குப பரதேகமென்றும் சூக்குமதேகமென்றும் தூலதேகமென்றுஞ்சொல்லப்படுந் திரிதேகங்களோடுங்கூட்டி அறிவுவிளங்கச்சிருஷ்டித்து,—நோக்கி. எ-து. இரக்ஷித்து,— பெரும்போகமனைவயளித்து. எ-து. புவநபதிகளாயிருககின் றபர

போகங்களையும் புவனவாசிகளாயிருக்கின்றவபரபோகங்களையுங் கொடுத்துத் திரோபவித்து,—பிறப்பிணையுமொழுத்திட்டு எ-து. சங்கரித்துச் சிவனுக்கொப்பாகியிருக்கும்பரமுத்தியையுஞ்சுத்த மாயாபுவனப்பிராபதியாகியவபரமுத்தியையுங்கொடுத்தநுக்கிரகித்து;—ஆசகலுமடியருளத்து.எ-து.தீக்ஷாசுத்தராகியசாதகாஇருதயகமலத்திலேயவரவர்யோககியாநுகுணமாய்ச்சகள நிஷ்கள சகள நிஷ்களநிருத்தமத்தியதிலகநிஷ்களாதீதமென்றுமுன்சொன்னசொருபங்களாய்,—அப்பனுடனிருககும். எ-து, சிவனோடு கூடத்தியாநம்பணணப்படும்;—அன்னையருட்பாதமலர் எ-து.உலகமாதாவினதுபாதாரவிந்தங்களை,--சென்னிவைபபாம். எ-து. சிரசிலேசூட்டிககொள்ளாநிறகின்றோம். எ-று.

இவ்வுரைதிருவண்ணாமலையாதீனம் ஞானப்பிரகாசத்தம்பிரானுர்கூறியது.

---

விநாயகர்வணக்கம.

இயம்புநூலிருந்தமிழின்செய்யுளாற்றுவிடையூறுதீர்ந்தினிதுமுடியவேண்டித், தயங்குபேரொளியாகியெங்குநின்றதலைவனார்மலைமாதுதன்னோடாடிப், பயந்தவைங்கரநாற்றோண்முக்கணிருபாதப் பரியதொருநீள்கோட்டுப்பெரியபண்டிக், கயந்தனடிக்கமலங்கணயந்துபோற்றிக் கருத்திலுறவிருத்திமிகக்காதல்செய்வாம். (ரு)

(இ-ள்.) இயம்புநூல்.எ-து.இபபொழுதுசொல்லுநூல்,—இருந்தமிழின்செய்யுளாற்றுவிடையூறுதீர்ந்தினிதுமுடியவேண்டி. எ-து. பெரியதமிழினுற்செய்யுமிச்செய்யுள் பஞ்சாதிகாரங்கள்சொல்லும்வழியால்வருங்குற்றந்தீர்க் இனிதுமுடிந்திலிரு

ம்பி,—தயங்குபேரொளியாகி. எ-து. விளங்கும்பெரியவொளியாகி,—எங்குநின்றதலைவனார். எ-து. எவ்விடத்தும்பூரணமாய்நின்றகர்த்தா,—மலைமாதுதனோடாடிபபயநத. எ-து. அசுராவதைநிமித்தமாக விமையமாதோடுங்கூடியுண்டாக்கப்பட்ட,—ஐங்கரநாற்றோண்முககணிருபாதபபெரிய தொருநீள்கோட்டுப்பெரியபணடிக்கயந்தன. எ-து. ஐந்துகையினையு நாலுதோளினையு மூன்றுகண்ணினையு மிரண்டுபாததகினையும பரிதாகிநீணடதொருகொம்பினையும் பெரியவயிறறினையுமுடையயானைமுகவனது,—அடிககமலஙகணையநதுபோறறிக கருததிலுறவிருத்திமிகக காதல்செய்வாம். எ - து. ஸ்ரீபாதகமலஙகளைவிரும்பித் துதித்துச் சித்ததிலுமுறும்படிவைதது மிககவிருபபதனதச்செயயாநின்றேம. எ-று.

இச்செய்யுள் சிவஞானசித்தியென்றுசொல்லப்பட்டவிந்நூல் விககினமின்றிவினையமுடிபபதுகாரணமாக விநாயகர்வணக்கங கூறிற்று. (௩)

கந்தர்வணக்கம்.

அருமறையாகமமங்கமருங்கலை நூறெரிந்தவகத்தியனு
க்கோத்துரைக்குமருட்குருவாங்குருளை, திருமறைமாமு
னிவர்முனிதேவர்கடந்தேவன்சிவனருள்சேர்திருமதலை
தவநிலையோர்தெய்வம், பொருமறையார்கழல்வீரர்வீர
ன்கையிற்பூநீர்கொண்டோவாதுபோற்றுமடியார்கள், க
ருமறையாவகையருளிக்கதிவழங்குங்கந்தன் கழலிணைக
ளென்சிரத்திற்கருத்தில்வைப்பாம். (௪)

(இ-ள்.) அருமறையாகமமங்கமருங்கலை நூறெரிந்தவகத்தியனுக்கோத்துரைக்குமருட்குருவாங்குருளை. எ-து. தெரிதற்கரி

யவேதங்களையு மாகமங்களையு மாறங்கங்களையு மரிதாகியகலை ஞானங்களையு மாராய்ந்தவகத்தியமாவிருடிக்கு வேதவியாக்கியானத்தையருளிச்செய்த ஞானாசாரியனாகியவிளையவன்,— திருமறைமாமுனிவர்முனி. எ - து. அழகியவேதத்தைக்கற்றுவல்ல மிக்கவிருடிகட்குத் தலைவனாகியவிருடி,— தேவர்கடந்தேவன. எ-து. தேவர்கட்குச்சுவாமி,—சிவனருள்சேர்திருமதலை. எ-து சிவனுக்குக்கிருபையாலுண்டாகியபுத்திரன்,— தவசிலையோர் தெய்வம். எ-து. தவத்தின்மிக்கோர்க்குவழித்தெய்வம்,— பொருமறையார்கழல் வீராவீரன். எ-து. யுத்தத்தைப்பொருந்தின வீரக்கழலையுடையவீரர்க்குவீரன்,— கையிற்பூநீர்கொண்டோவாதுபோற்றுமடியார்கள் கருமறையாவகையருளிக்கதிவழங்குங்கந்தன. எ-து.ஒழியாதுகையின் மலருமஞ்சனமுங்கொண்டுதிக்குமடியார்கள் கருப்பத்திலழுந்தாதவகையருள்செய்து மோக்ஷத்தைக்கொடுக்குங்கர்த்தசுவாமி,— கழலிணைகளென்சிரத்திற கருத்தில்வைப்பாம். எ - து. அவனது ஸ்ரீபாதங்களிரண்டையு மெனதலைமீதுமிதயத்திலும் வைத்துக்கொள்ளாநின்றேம். எ-று. கழல்வீரனென்றது அசுரரை.

இச்செய்யுள் கர்த்தர்வணக்கங்கூறிற்று.

ஆதிநடுவந்தமிலாவளவில்சோதியென்றசெய்யுள்முத லிச செய்யுள்காறுந் தெய்வவணக்கங்கூறிற்று. (௪)

---

கருமறையாவகையருளி. எ-கு. ஜனனமரணங்கட்குக்காரணமாகியமலமறையாதபடி கிருபைபண்ணியெனவும்; கதிவழங்கும். எ-கு. சிவச்சொரூபவிளக்கமாகியமோக்ஷத்தைக்கொடுக்குங்கர்த்தனெனவும்; விசேடித்துரைத்தனர், திருவண்ணாமலையாதீனம் ஞானப்பிரகாசத் தம்பிரானவர்.

குருவணக்கம்.

பண்டைமறைவண்டரற்றப்பசுந்தேன்ஞானம் பரிந்
தொழுகச்சிவகந்தம்பரந்துநாறக், கண்டவிதையக்கமல
முகைகளெல்லாங் கண்டிறப்பக்காசினிமேல்வந்தவருட்
கதிரோன், விண்டமலர்ப்பொழில்புடைசூழ்வெண்ணெய்
மேவுமெய்கண்டதேவன்மிகுசைவநாதன், புண்டரிகம
லாதாழச்சிரத்தேவாழும் பொற்பாதமெப்போதும்போ
றறல்செய்வாம். (௫)

(இ-ள்.) (பண்டைமறை-செயவாம்.) எ - து. பழையதாகிய வேதவண்டுகளொலிப்பப பரஞானமாகியசெவ்வித்தேன் சிநேகத்தோடும்புறப்படச் சிவமாகியமணம்விரிந்துமணக்கச் சகலரிற்சத்திநிபாதம்பதிந்துதரிசித்தோரது விதயகமலங்கள்விட்டுவிரியப பூமியிடத்தெழுந்தருளிய விரிந்தமலர்களையுடைய பொழில்கள் பக்கங்களிலேசூழப்பட்டாநின்ற திருவெண்ணெய்நல்லூராத்திருப்பதியாகப்பொருந்தின சுத்தசைவத்துக்காதியாகிய மெய்கண்டதேவனென்னுந் திருநாமத்தையுடையஞானசூரியனதுஅழகிய ஸ்ரீபாதங்கடாமரைமலருமொப்பழியும்படி யெமதுதலைமீதே யெப்பொழுதும்வாழுமாதலா லவற்றையேதுதியாநின்றேம்.எ-று. கண்டவிதயககமலமுகைகள் கண்டிறந்தவிடத்துவண்டரற்றப பசுந்தேனொழுகப பரந்துமணக்கவெனக்கூட்டினுமமையும்.

இச்செய்யுள்குருவணக்கங்கூறிற்று. (௬)

அவையடக்கம்.

மாலயன்மாமறையறியாவாதிமார்க்கம்லவையகத்தாகம
ம்வேதமற்றுமுள்ள, நூலையெலாமுணர்ந்திறைவன்கழ

லேநோக்கு நோன்மையருந்தவர்முன்யானுவலுமாறு,
வேலையுலாவுந்திரைகளோவீசியேறிவேறெழுமொன்றாகி
ன்றபோது,சாலவுமானகுளப்படியிறங்கினறுசலமது
தானேயொன்றுந்தன்மைத்தாலோ. (௬)

(இ-ள்) மாலயன்மாமறையறியா வாதிமாகம். எ-து. பிரமவிஷ்ணுக்களாலு நான்குவேதங்களாலு மறிதற்கரிதாகிய பரமேசுரனதுவழியை,— வையகத்தாசமயவேதமற்றுமுள்ளநூலையெலாமுணர திடைவளகழுமேலேநோக்குநோன்மையருந்தவர முன்யானுவலுமாறு. எ-து.பிரபஞ்சத்தினகணணே ஆகமத்தையும்வேதத்தையு மவற்றினவழியுண்டாகியசாத்திரங்களையுங்கற்றறிந்துபரமேசுரனது ஸ்ரீபாதங்களையேபற்றுக்கோடாகவுடைய நோய்முதலியவற்றைப்பொறுக்குந்தபோதனர்முன்னே யாதுமறியாதயான்சொல்லுநெறி,—வேலையுலாவுந்திரைகளவீசியேறிவேறெழுமொன்றாகின்றபோது சாலவுமானகுளப்படியிறங்கினற சலமதுதானேயொன்றுந்தன்மைத்தாலோ. எ-து. சமுத்திரத்தினுலாவுந்திரைகண்மிகுதலும் வேறற்றுப்பட்டசமுத்திரமொன்றுபட்டின்றவிடத்து மிகவு மானகுளப்படியிறங்கிற குமஜலத்தைப் பிரளயஜலத்துக்கொப்பென்னுமுறைமையுடைத்து. எ-று. ஆலும் ஓவும். அசை.

இச்செய்யுளவையடக்கங்கூறிற்று. (௬)

இதுவுமது.

நீடுபுகழுலகுதனின்மைந்தர்மாதர் நேயமொடுதாம்ப
யந்தபுதல்வர்வாயிற்,கூடுமொழிமழலையொடுகுழறியொ
ன்றுங் குறிப்பரிதாயிடினுமிகக்குலவிப்போற்றி, மாடுந
கித்துவென்றுகொண்டுவாழ்வ ரதுபோலமன்னுதமிழ

ப்புலமையோனொன், பாடுகவிக்குற்றங்கள்பாரார்நூல்
பாராட்டாகிற்பாருட்பரிசினுலே.                       (எ)

(இ-ள) நீடுபுகழுலகுதனினைமைந்தர்மாதர் நேயமொடுதா
ம்பயந்தபுதல்வாவாவாயிற கூடுமொழிமழலையொடுகுழறியொ
ன்றுங்குறிப்பரிதாயினுமிககுலவிபபோற்றி மாடுமகிழ்துவெ
ன்றுகொணடுவாழ்வா. எ-து. நிலைபெற்றபுகழினையுடையவுலகி
னகண் ஸ்ரீபுமான்களா சிநேகத்தோடும்பெறறபிள்ளைகளிடத்து
ணடாகியவாாத்தை யிளமையோடுதடுமாறியொன்றுந்தெரிதற்
கரிதாயிருந்ததாயினு மதனைமிகவுங்கொணடாடிபபோற்றி யா
மபெறுமைசவரியமென்றுமகிழ்ந்துவாழாநிறபாகள்;—அதுபோ
லமனனுதமிழ்பபுலமையோ னொன்பாடுகவிகுறறஙகளபாரா ரீ
ந்நூலபாராடடாகிற்பாருடபரிசினுலே. எ-து அத்தன்மைபோ
ல நிலைபெற்றத்தமிழ்ப்புலவனொனனிடத்துணடாகிய கவியினது
குறறம்பாரார், யான்சொன்னநூலைபபாராட்டாகிற்பர் ஞானத்
தின்முறைமைபபாட்டினுல. எ-று.                          (எ)

நூறசிறப்பு.

சுத்தவடிவியல்பாகவுடையசோதிசொல்லியவாகமங்
களெலாஞ்சூழப்போயு, மொததுமுடியுங்கூடவோரிட
த்தே யொருபதிக்குப்பலநெறிகளுளவாறுபோற், பித்
தர்குணமதுபோலவொருகாலுண்டாய்ப் பின்னொருகா
லறிவின்றிப்பேதையோராய்க், கத்திமொன்மாக்களுரை
க்கட்டிறபட்டோர் கனகவரைகுறித்துப்போய்க்கடற்
கேவீழ்வார்.                                        (அ)

(இ-ள) சுத்தவடிவியல்பாகவுடையசோதி.எ-து.ஞானமேத
னக்குச்சுதந்தரவடிவாகவுடைய கர்த்தா,—சொல்லியவாகமங்க
ளெலாஞ்சூழப்போயுமொத்துமுடியுங்கூடவோரிடத்தே.எ-து.

சாயபேதங்கடோறு மவனருளிச்செய்தவாகமங்களெல்லாம்ப
லபேதமாயினும் ஞானபாதமெல்லாவாகமமுந்தன்னிலொத்துச்
சென்றொருபொருளையேநோக்கிமுடியும். அஃதென்போலவெ
னின்,—ஒருபதிக்குப் பலநெறிகளுளவாறுபோல. எ-று. ஒ
ராக்குண்டாகியவழிகளெல்லாம் பலபேதப்பட்டதாயினும் சே
ரவவூரையேநோக்கிக்கிடந்தாற்போல,--பிறதாகுணமதுபோல
வொருகாலுண்டாயபின்னொருகாலறிவின்றிப்பேதையோராய
க்கத்திமான்மாக்களுணாக்கட்டிப்பட்டோர் எ-று. எல்லாச்ச
மயத்திலு ஞானபாதமொக்குமென்றுணர்ந்து முத்தியடைந்திருக்
குமானமாக்கள் போலாகாமற் பிறந்தேறினாகுணம்போல மருளு
கமெருளுமாய் முத்தியடையத்தக்கநெறியைக்காணாமலந்நெறி
யைக்கண்டாற்போலக்கூப்பிட்ட தெகிரியுமறிவிலோராகிய பரசம
யிகளாகியவானமாக்களாதுபசுநாற்கட்டுக்குட்பட்டோர்,— கன
கவணாகுறித்துப்போய்க் கடற்கேவீழ்வார். எ-து மகமேருவை
க்குறித்துப்போகவொருப்பட்டவனவ்வழிப்போகாமன் மற்றொரு
திசையேபோய்க் கடற்கேவீழ்ந்தாழ்ந்தனமைபோலும். எ - று.

இச்செய்யுள் பரசமயிகள்கொள்ளுநூல்பசுநூலாகையா
ன் முத்தியடையாரென்பதுகூறிற்று. (அ)

---

பரசமயிகண் முத்தியடையாரென்பதற்குச் சிவதருமோத்
திரம். "எடுத்ததோராக்கைதன்னி லிருண்மலசத்திதன்னை, நடு
த்தருள்சைவநூலின்சாதனமதனைத்தள்ளி, விடுத்துவிறற்றநூ
லின்சாதனமவிருப்புவாமுனை,னடுத்தவாறமுசம்விட்டுப்புற்கை
யாசரிப்பரான்றே,,என்றெடுத்துக்காட்டினார் ஞானப்பிரகாசர்.

---

நூற்கதிகாரியும் நூல்வழியும் நூற்பெயரும்.

போதமிகுத்தோர்தொகுத்தபேதைமைக்கே பொருந்
தினோர்வாக்கன்றிக்கதிப்பாற்செல்ல, வேதநெறியெனு

மவர்கட்கறியமுன்னா ளிறைவனருணந்திதனக்கியம்பநந்தி, கோதிலருட்சனற்குமாரற்குக்கூறக் குவலயத்தினவ்வழியேமகுருநாதன்கொண்டு, தீதகலவெமக்களித்தஞானநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தியென்றே.

(இ-ள்.) போதமிகுத்தோர். எ-து சாத்திரஞானத்தானமிக்கவர்கள்,—தொகுத்தபேதைச்சமயத்தே பொருந்தினோர் எ-து இந்தவகையாகச்சொல்லப்பட்டவறியாமையைக்கூடினோர்,—இவர்க்கன்றி எ-து இந்தவிருவர்க்குமன்றி,—சத்திபாதஞ்செல்ல வேதுநெறியொளுமவர்கட்கறிய முன்னாளிறைவனருணந்திதனக்கியம்ப. எ-து. முத்தியின்வழிச்செல்லுதலுக்கு யாதுவழியென்றாயுஞ்சத்திபாதத்தோர்க்கறியவேண்டி யாதியிலேபரமேசுரன்றனவாளவிறப்பத்திசெய்யுநந்திகேசுரநாயனார்க்கருளிச்செய்ய,—நந்தி கோதிலருட்சனற்குமாரற்குக்கூற எ-து ஸ்ரீ நந்திகேசுரநாயனாருந் தம்பாலவிற குற்றமற்றபத்திசெய்யுஞ்சனற்குமாரபகவானுக்கருளிச்செய்ய,—குவலயத்தி னவ்வழியேமகுருநாதன் கொண்டு தீதகலவெமக்களித்தஞானநூலைத் தேர்ந்துரைப்பன் சிவஞானசித்தியென்றே எ-து. அம்முறைமையாலேகேட்டருளிச்செய்து பிரபஞ்சத்திலெழுந்தருளி யெம்முடையசுவாமியாகியமெய்கண்டதேவநாயனார் குற்றமற்றதமிழாகச்செய்து சிவஞானபோதசிற்பபுராமநதரித் தெமக்குஞானநூலாகவருளிச்செய்தவிந்தநூலை யோதியுணர்ந்துசொல்லாநின்றேன் சிவஞானசித்தியெனனும்பெயரினால். எ-று.

இச்செய்யுள் குருபரம்பரையும் பாரம்பரியமாகநூல்வந்த முறைமையுங்கூறிற்று. (௯)

---

கடுவாகத்தலைமையாகிய சத்திநிபாதத்தோரிலக்கணத்திற்கு; "திரைக்கடலுட்சென்றுசித்தியுடைத்தாழ்ந்த,மரக்கலங்கை

விட்டார்மனம்போ—லிருக்குமெனக், கையாலினைப்பிரவிகசஞ் சிககலங்கினே, னுய்யுநெறிகாண்வுணாரது '' எனவுமெடுத்துக் காட்டினாஞானபபிரகாசா.

---

நூறகருததது.

இறைவனையுமிறைவனுலியமபுநூலு மீண்டளவும் பொருளியல்புமவேண்டுஞ்செய்தி, முனறமைகளுமபெ ததமொடுமுததியெல்லா முதுலகிலெமககியன்றமுய றசியாலே, சிறைபுலவும்புனனிலவிததோனறுமபேயத தோச செய்கைபோலுண்டாயபொய்கொண்மாறக்கத, துறைபலவுங்காவிடையாற்சொல்லிபபோக்கித துக டராவிரநூலிற்சொலலகிறபாம். (கO)

(இ-ள) இறைவனையுமிறைவனுலியம்புநூலும எ-து பர மேசுரனையும்பரமேசுரனுலருளிசசெயயபபட்டவேதாகமபுராண பபொருளகளையும,—எண்டளவும.எ-து இவவிடத்துணடாகிய வளவைபபிரமாணமும,—பொருளியல்பும. எ-து. அவ்வளவை களாலறியும்பொருளகளினியலபும,— வேணடுஞசெய்திமுறை மைகளும் எ-து அபபொருளியலபினவழிநினறோர் செயயவே ண்டுமாசாரஙகளையும்— பெததமொடுமுததியெலலாம். எ-து. பெத்தலக்ஷணததுடனே முத்திலக்ஷணஙகளெல்லாம், —மூ துலகிலெமககியன்றமுயற்சியாலே எ-து. பழயதாயவரும்பிரப ஞசத்திலெனககுககூடினசெயலாலே,—சிறையுலவும்புனனிலவி த்தோனறும்பேயததோச செயகைபோலுணடாயபொய்கொண மாககத்துறைபலவுங்காவிடையாறசொலலிப்போக்கி. எ-து, கரையிலகப்பட்டுசிறகு நீரையொபபததோன்றுகின்றபேய்த்தே ரை மெய்யென்றுசிருபிககுமிடத்துப பொய்யானதன்மைபோல

நூல்களாகவும் வழிகளாகவும் கேட்டார்க்குப்பொருந்தத்தகக தாகவுண்டாய பொய்யைக்கைக்கொண்டவழிகளாகிய வுலோகாயிதன்முதற்பாஞ்சராத்திரியீறுயசமயிகளுடையபலதுறைகளை யுங் கட்டாவாலு மவிடையாலுஞ்சொலலிக்கி,—துகடீர விருநா லிறசொலலகிறபாம்.எ-து.குறறநீர ஞானபாததைதயறியவிங் நூலிலேசொலலககடவேன. எ-று.அளவென்றது-அளவைகள். அளவையாவன-காணடனமுதலிய ஒடு எண்.துகடீரவென்றது அவரவாகளளவைமாகத்தினினறகுறறநீரவெனக.

இச்செய்யுள் நூற்கருத்துககூறிற்று. (௧0)

இவைபத்தும்பாயிரம்.

பாயிரமுற்றிறு.

## உலோகாயிதன்மதம்.

இனி உலோகாயிதன்முதற் பரசமயிகள்பிரமாணப்பிரமேயங்களும் அவாகளைநிராகரிககுமாறுமருளிச்செய்கிறார்.

இந்திரபுரோகிதனியம்புமொருநூலின்
றந்திரமெனறறிவிஞேடருளிலாமற்
சந்தனைபுயந்துமணமாலைகடயங்க
வுந்தியுலகததிலுலகாயிதனுரைபபான். (௧)

(இ-ள்.) (இதனைப்பொருளுக்கேற்பமாறுக.) சாந்தம்பொருந்தியதோளிடதது நறுநாற்றமபொருந்தியமாலைகளபிரகாசிககுங்பாபாசயமீஙகாதவுலோகாயிதன இந்திரபுரோகிதனுகியபிரக

ஸ்பதிபகவா ஞன்மாக்கள்போகங்காரணமாயருளியநூலை யிப பொழுதிடையூறின்றிக்கொள்ளுதற்கு ஞானமுங்கிருபையுமில் லாமலந்தநூலையேமெய்யென்றுசொல்லாநின்றனன். எ-று. இயம புநூல உலோகாயிதசித்தாந்தம். சந்தனம்புபந்துமணமாலைகட யங்க எ-து போககாமியானையாலே பலனசுகந்தாதிகளையுடை யனென்பதுநோக்கியெனக. உந்தியுலகத்திலுலகாயிதன. எ-து ஸ்திரீபோகமேமெய்யென றநுபவிக்குமவன ஜநநாசைவிடா னென்பதுகருத்து உந்துமுலகம்பாடமாயிற் இளமையினதெனக இதற்குறைசொல்லியது இந்திரனறவத்திலேபுரியப பிரகஸபதியவ னைமயக்கிவிடையத்திலேவீழ்வித்தசாத்திரமெனக. அஃதென போலவெனனின அருச்சுனனறவத்திலேபுரிய வாசுதேவனறே ரிலேயிருந்து கீதையென்னுஞசாத்திரத்தினாலே மயக்கித்தொழ லுவித்ததறகொக்குமெனக்கொள்க. உலோகாயிதன சாரவாக னென்றுபெயர்பெறுவன.

இச்செய்யுளுலோகாயிதன்பிரகஸ்பதிநூலையேபிரமாணமா கக்கொண்டானென்பது கூறிற்று. (க)

---

பிரகஸபதிகூறியமதனூல்வாசுதேவர்கூறிய நூலுக்கொப்பா மோவெனில, விவகாரதிசையிலல்லது புண்ணியபாவங்களும சொர்க்கமுதலானபிரபஞ்சங்களுங் கருத்தனு மான்மவர்க்கங்க ளும் பூசை ஜபம தியானம அநுஷ்டானம் யாகமுதலியகன்மங்க ளும் பாரமார்த்ததிசையிலேமெய்யல்லபொய்யென்றுசதாசாரவி ரோதஞ்சொல்லலால்; ஒருபுடையொப்பாமென்க. எனவெடுத்து க்கூறினார்ஞானப்பிரகாசர். உந்தியுலகத்தில். எ-கு. கடலின்றாற்சூழ ப்பட்டவுலகமெனபபொருளுரைப்பாருமுளர். உந்தி-கடல.

கண்டளவைகாட்சிமனமாதியிருமூன்ருய்
வேண்டுமெனுமானமுதலானபலவேண்டா
பூண்டபொருள்பூதமவைபுகழ்கடினசீதந்
தீண்டரியவெம்மைசலநத்திறெடுசேர்வே. (௨)

(இ-ள்) கண்டளவைகாட்சி. எ-து. இவ்விடத்தளவையெ னறுசொல்லப்படு முமதுகாட்சியை,— மனமாதியிருமூன்ருய வேண்டும். எ-து அக்காட்சியினைவிகற்பித் தையக்காட்சிமுத லாறுவகைக்காட்சியாய்க்கொள்ளல்வேண்டும்,— அனுமானமுதலா னபலவேண்டா. எ-து இக்காட்சியில் விகற்பமொழிந் தனுமான மஉரைமுதலியவேண்டுவதில்லை,— பூண்டபொருள்பூதம் எ-து. அக்காட்சியானுமதனவிகற்பத்தானுங்கண்டுகைக்கொண்டபொ ருள் பூதங்களாகும்;— அவை. எ-து பூதங்களாகும்,— புகழ் கடினசீதந்தீண்டரியவெம்மை சலநத்திறெடுசேர்வே. எ-து. சொல்லப்பட்டகடினம் சீதம் தொடுதற்கரியவெப்பம் சலநமெ ன்னுஞ்சொரூபங்களோடுங் கூடும்,எ-று மனமென்ற தையக்கா ட்சி. பழுதையைப்பாம்பென ஐயப்படுவது மனமாகலின் மன க்காட்சியென்ருர். இனிக்காட்சியிருமூன்ருவன ஐயக்காட்சி,வா யிற்காட்சி, விகற்பக்காட்சி, அந்வயக்காட்சி,வெதிரேகக்காட்சி, திரிவுக்காட்சியெனவிவை இனிசவிகற்பக்காட்சி நிர்விகற்பக்கா ட்சியாவது இவ்வாறினேடுங்கூடாதுகுற்றமறக்காண்பது.ஐயக் காட்சியாவது இருளிற்பாம்போபழுதையோவென் றையுறுதல், அதுவேமனக்காட்சி. வாயிற்காட்சியாவது கண்முதலியவிந்தி ரியங்களாற்காண்பது விகற்பக்காட்சியாவது பெயர் ஜாதி குண ம் கன்மம்பொருளென வைந்திணுங்காண்பது. அந்வயக்கா ட்சியாவது புகையினலனறிதல. வெதிரேகக்காட்சியாவது நாற் றத்தால்பூவறிதல. திரிவுக்காட்சியாவது பழுதையைப்பாம்பெ ன்றுகொள்வது,

இச்செய்யுள்உலோகாயிதன் சித்தாந்தத்திற்கொள்ளுங்க டசியளவையும் அதனின்விகற்பமு மதனாலறியும்பொருளாகிய பூதங்களனைத்தும் அவற்றின்குணங்களுங்கூறிற்று. (உ)

அனுமானமுதலாவன, அனுமானம, ஆகமம், உபமானம, அருத்தாபத்தி, அபாவம, சம்பவம, ஐதிகம், யுகதிபாரிசேடமுத லானவை. அளவைமுதலியன தனியேயிநநூலிற்கூறியிருபபனத விவரமாய்ககாண்க.

சாற்றுபெயரானவை தலமபுனல்கனற்பின்
காற்றுமெனலாமிவைகலந்தகுணமோதி
னாற்றமிரதமமுருவநற்பரிசமாகும
போற்றுமிவைசித்தவியல்பாமிவைபுணர்ப்பே. (௩)

(இ-ள்.) சாற்றுபெயரானவை. எ-து அபபூதங்களனைத்துமப்படிக்கூடினபின்பு. அவையிற்றுக்குச்சொல்லும்பெயர்களானவை,—தலம்புனல்கனற்பின் காற்றுமெனலாம். எ-து. பிருதிவியு மப்புவுந் தேயுவும் வாயுவுமென்றுசொல்லலாம,—இவைகலந்தகுணமோதின். எ-து இபபூதஙகளகூடியகுணங்களின்பெயரை முறையானேசொல்லின,— நாற்றமிரதமமுருவநற்பரிசமாகும். எ-து. கந்த மிரத முருவம் பரிசமிவையாகும,—போற்றுமிவை. எ - து. தெய்வமாகததொழும இபபூதங்களனைத்தும்,— சித்த வியல்பாம். எ - து. அழியாதவியலபுகளையுடையவாம்,— இவைபுணாபபே. எ-து. இவைகூடுமிடதது மேலானவாயுபபூதத் திலேநின்று மூன்றுபூதங்களி லொன்றிலொன்றாக வடைவேகூடபபடும. எ-று. வாயுகண்ணுக்குக்தெரியாதாயினும் பரிசங்கொணடுகொணகையாற் பின்காற்றுமெனலாமென்றொனினுமமையும்.

இச்செயயுள் பூதங்களுன்கின்பெயரு மவற்றேடுங்கூடிய குணங்களின்பெயருமபூதஙகளகூடுமுறைமையுங்கூறிறறு.(ரு)

போறறுமிவைவிததவியலபாமிவைபுணாபபே. எ-கு. புசழு பபடுமிவைவித்தியமா யொருகர்த்தாவாலன்றிப்பொருந்திக்கூடுத ல்சுபாவம். எனறுாஞானப்பிரகாசர்.

ஒததுறுபுணாசசியினுருக்களபலவாகும
மைவததுறுகடாதிபலமண்ணின்வருமாபோற்
புத்திகுணாநறபொறிபுலன்களிவையெல்லா
மித்தில்வருநீரினிலெழுங்குமிழியொாததே. (சு)

(இ-ள.) ஒத்துறுபுணாச்சியினுருக்கள்பலவாகும். எ - து. அபபூதங்களின்சொரூபங்களுங்குணங்களுந் தம்மிலொத்துககூடுகிறகூட்டத்திலே வடிவுகள்பலவுணடாம.அஃதெனபோலவெ ன்னில்,— வைத்துறுகடாதிபலமணணின்வருமாபோல். எ-து. திரிகையிலேவைத்தமண்ணினகண்ணே பலகடாதிகடோன்று மாபோல,— புத்திகுணாநறபொறிபுலன்களிவையெல்லாமித்தில் வருநீரினிலெழுங்குமிழியொாததே. எ-து. (இதனைபபொருளுக் கேற்பமாறுக.) நீரினிற்கிளம்பியகுமிழியையொத்து புததியுங்கு ணமு ஞானேந்திரியமாகியபொறிபுலன்களு மிவையெல்லா மிவ் வுருவின்கண்ணேயுண்டாம். எ-று ஒத்துறுபுணாச்சியி னுருக்க ள்பலவுண்டாமெனவே ஒவ்வாமலுறும்புணாச்சியி னுருக்களுங் குணமுமேறிககுறைநதுவருமென்பதுசருத்தாயிற்று.உருககள் பலவாவன,எறும்புகடையானைமுதலியவுருககள்.புத்திமுதலாயி னவு மிவ்வுருக்களின்வருமென்பது. புத்திமுதலாயினவை முன் பில்லாதவை இவ்வுருவிலேதோன்றி இவ்வுருவோடேமடியுமெ ன்பதுகருத்து.

இசசெய்யுள் பூதஙகளிலேயுருத்தோன்றுமுறைமையும்,அவ்வுருவிலேபுநதிமுதலானவைதோனறுமெனபதுங்கூறிற்று முனோமுதலானகூட்டத்து மதசத்தியுணடாஞறபோலவும் ஸ்ரீபுருஷாகூடடத்திற சுகமபோலவுமசாதுாபபூதசமவாயததிலே ஞானசுகாதிகளதோனறி யவைவளரவளாந்துங குறையககுறைநதுமபிரகாசியாநிறகுமெனககொளக. (ச)

பூதமதிஞெனறுபிரியப்புலனிறக்கும்
நீதியினினிறபனநடபபனவுமுறபோ
லோதுமவஙகையாகிபுறுகாரிய முலநதா
லாதியவையாமிதனையறிவதறிவாமே. (ரு)

(இ-ள.) பூதமதிஞெனறுபிரியபபுலனிறசகும் எ-து. அப பூதங்களிலவாயுபபிரிய விநதிரியஙகளகெடுமெ. புலனிறகுமென வே புலனகாரணமாகிய பொறி குணம் புததியவையுமிறககும,— நீதியினினிறபனநடபபனவுமுறபோல். எ-து. இமமுறைமையாலே தாபரசஙகமஙகளுமிறககபபடும,— ஒதுமவையாகியுறுகாரியமுலந்தாலாதியவையாம. எ-து. சொனனமுறைமையிற்கூடிபபோந்தகாரியமாகிய சொருபகுணஙகளிறநதாற காரணமாகியபூதஙகளேயாம்.—இதனையறிவதறிவாமே. எ-து. இவையிற்றையிம்முறைமைபபாடடாலேயறிவதேஞானமாவது எ-று. (ஞானம) இநதபபூதஙகளபிரியச சுகாதிசேதஞருபவிகறபங்களு மண்ணிறகடமு மகஙிஙியிநீரபமு மினனவழிபுககதெனறறியாம னசிததவாறுபோல நசிககுமெனககொளக.

இசசெய்யுள பூதம்பிரியுமாறும் பூதத்துடனேயிநதிரியாதிகணீஙசவுருககளகெடுமாறுங்கூறிறறு.

இந்திரபுரோகிதனென்னுஞ செய்யுணமுத லிச்செயயுட்காறும் தமமதஙகூறி மேறபிறாமதங்கூறுகினறது. (கூ)

வே று.

இப்படியன்றிக்கன்மமுயிரிறைவேறுண்டென்று
செப்பிடுமவாக்குமண்ணோர்செய்திடுங்குற்றமென்னே
வொப்பிலாமலடிபெற்றமகனொருமுயற்கொம்பேறித
தப்பிலாகாயப்பூவைப்பறித்தமைசாற்றினாரே. (௬)

(இ-ள்) இப்படியன்றி. எ-து. இப்படிப்பூதக்கூட்டத்தினு லுருக்கடோன்றி வாயுக்கெடக்கெடுதலன்றி,—கன்மமுயிரிறை வேறுண்டென்று செப்பிடுமவாக்குமண்ணோர் செய்திடுங்குற்ற மென்னே எ-து முன்செய்தகன்மம்பின்றொடருமென்று பித னைப்புசிக்கத்தக்கதோரான்மாவுண்டென்று மிவையிற்றைக்கூ ட்டுவானொருகர்த்தாவுண்டென்றுஞ் சமயிகளுலகத்தாரைமயக்க க் வுலகத்தாரைசமயிகளுக்குச்செய்தகுற்றமியாது?—ஒப்பிலாமல டிபெற்றமகனொருமுயற்கொம்பேறித்தப்பிலாகாயப்பூவைப்பறி த்தமைசாற்றினாரே. எ-து உலகத்தாரைமயக்கச் சமயிகள்கூ றுமது, மலடிபெற்றவொப்பில்லாதமக னொருமுயலின்கொம்பி லேயேறி யாகாயம்பூத்தப்பூவைத் தவறின்றிப்பறித்தானென்னுந் தன்மைக்கொக்கும். எ-று. பூதமேதெய்வமாவது,பூதக்கூட்டத் தின்மிகுதிக்குறைவேகன்மமாவது, பூதக்கூட்டத்தினிசுழுமுண ர்வேயான்மாவாவது, இதுவன்றிவேறேதெய்வமுங்கன்மமுமா ன்மாவுமில்லையென்பது கருத்து. மலடிபெற்றவொப்பிலாமகனெ னமாற்றுக ஆகாயப்பூவைத்தப்பிலாமற்பறித்தமையெனமாறுக.

(ஞானம்.) பொய்ப்பெருகிப்புராணஞ்செய் துலகத்துள்ளாரை மயக்கித் தீர்த்தயாத்திரை தபசுக ளக்கினிகோத்திரம் தானம் த ன்மம் ஜபம் தியானம் சமாதியென்றும் உபவாசவிரதமென்றும் பேரிட்டுப் பகற்பொழுதுபோக்கி உலகத்தாரைப்பொருள்கவர் ந்து பொய்ப்பொருளைபேசிப்பொழுதுபோக்கி யவமேகழிவதர் கோவென்றுநொந்தானெனக்கொள்க.

இச்செய்யுள் கத்தாவுங் கன்மமுமான்மாவுமில்லையென்றில்பொருளுவமைகூறிமறுதத்துக்கூறிற்று. (சு)

செய்திடுங்கன்மமெல்லாஞ்செய்தவர் தம்மைப்பற்றி
யெய்திடுமென்னினிங்கேமாய்ந்திடுமேயவதெங்ஙன
மெய்தருதூலங்கெட்டுச்சூக்கமாயமேவுமென்னி
லையனேதீபம்போலுலதனொளியாவதுண்டோ. (எ)

(இ-ள்) செய்திடுங்கனமமெலலாஞசெய்தவா தமமைபபற்றியெய்திடுமெனனில. எ-து. முறபிறபபிலானமாககளசெய்தகனமமெல்லாங்கெடாம லானமாககளைபபொருநதினை றிபபிறபபிலேயூட்டுமென்றுகூறின்,—இஙகேமாயநதிடுமேயவதெஙஙன. எ-து. இபபிறபபிறசெயதபுணணியபாவங்க ளிககாயததோடுகெடுமாதலாற பிறபிறபபிறபுககுககூடுமாறெஙஙனே?—மெய்தருதூலங்கெடடுச்சூககமாயமேவுமென்னில எ-து. காயத்தோடு தூலமுறைமைகெட்டுச சூககமுறைமையாகப்பொருந்துமென்றுகூறின்,— ஐயனே தீபமபோலு லதனொளியாவதுண்டோ. எ-து. திரியோடேகூடிநின்றவிளக்கொளி யத்திரியைநீங்கிவேறேநின்றொளிருமெனனுநதனமைத்து, காயநீஙகிச்சூககுமமாய்ப்பொருந்துமுறைமை. எ-று. ஐயனேயெனற திழிவினகண்வந்தது. (எ)

மாய்ந்துபின்வயலிலிட்டவைதழைபலிக்குமாபோ,லே
ய்ந்திடுங்கன்மமெனினிலிட்டிடததிசையுமேனி, யோய்ந
துவந்தவாபுண்ணப்பண்ணுஞ்சோறுதரததற்றால்,வா
யந்திடும்பலம்வயிறறிறகொண்டிடுமவழுக்குவைததாய.

(இ-ள்.) மாய்கதுபின்வயலிலிட்டவைதழைபலிககுமாபோலேய்ந்திடுங்கன்மமெனனில். எ-து. வயலுககிட்டவைகதோலு

ந்தழையுந் தான்கெட்டுப் பின்புபயிர்க்குநன்மையைக்கொடுக்கு மாபோலக் கன்மந்தோன்றுமற்றன்மைகெட்டுப் பொருந்துமெ ன்றுகூறின்,—இட்டிடத்திலைசையும். எ-து. நீயுவமைகூறியவைக் கோலுாதழையு மிட்டவிடத்திற்பயிர்க்குநன்மையைக்கொடுக்கு மதுபோலப் பிறகாயத்திற்கு நன்மையைக்கொடுக்கவேண்டும். அஃதெங்ஙனேயென்னில்,—மேனியோய்ந்துவந்தவனாயுண்ண பண்ணுஞ்சோறுதரத்தரல் வாய்நிடுமேபலம்வயிற்றிற்கொ ணடிடுமவழுக்குவைத்தாய். எ-து. காயந்தளர்ந்து பசித்துவந்த வனாயுணணபபணணுவித்தசோறு அவருதரத்து மாண்டாலு ணடாம்பிரயோசன மவர்வயிற்றின்மலங்கொள்வாவழக்குக்கூ றினாய்.எ-று இட்டதுகெட்டுபபலித்தன்மலமெனக்கொள்க. (அ)

உருவமுமுணர்வுஞ்செயதியொத்திராகன்மமென்னின்
மருவுகைவிரல்கடமினவளாவுடன்குறைவுண்டாகி
வருவதிங்கென்னகன்மஞ்செய்துமுன்மதியிலாதாய்
பெருகுபூதங்கடமின்மிகுகுறைப்பெற்றியாமே. (கூ)

(இ-ள.) உருவமுமுணாவுஞ்செயதியொத்திராகன்மமென்னில். எ-து. ஒருகாயத்தினசெயதியு மோருணாவின்செய்தியு மொத்திராமற்பேதிக்கப்படுவது கன்மசசெயதியென்றுங் கூறின்,—மருவுகைவிரல்கடமினவளாவுடன்குறைவுணடாகி வருதிங்கென்னகன்மஞ்செய்துமுன்மதியிலாதாய். எ-து. (இதனைப பொருளுக்கேற்பமாறுக.) அறிவிலாதாய் முனபெந்தக்கன்மஞ்செயது பின்புதொழிலமருவினகைவிரல்க ளொன்றுக்கொன்றே றியுங்குறைந்துமிருப்பது,—பெருகுபூதங்கடம்மின்மிகுகுறைப பெற்றியாமே எ து. வளரும்பூதங்கடாமிகுக்குறைதலாற் கா யமுமுணர்வும்பேதிக்கப்பட்டதல்லது கன்மத்தினாலன்று.எ-று. [illegible]பலமில்லையென்பதுகருத்து. (க)

இனபொடுதுன்பமெல்லாமெய் துவகன்மமென்னின்,ண
ண்புனல்சந்தனறிநணுகவுமறுகவொண்ணா,மின்பொலி
யழலினொடுமேவுவநன்மைதீமை, யென்செயதநியமபி
டாய்நீயிவையெலாமியல்பதாமே. (௧௦)

(இ-ள்) இனபொடுதுனபமெல்லாமெயதுவகன்மமெனனில் எ-து. ஒருபொருட் கினபதுனபஙகளெலலாஞ சனமாநதாம பொருநதுமெனறுகூறின,— தணபுனலசநதனறிநணுகவுமறுக வொணணாமினபொலியழலினோடுமேவுவநனமைநீமையென்செயதநியமபிடாய்நீயிவைமெலாமியல்பதாமே. எ-து தெளிநதபுனலானது சநதனமுதலாகியநறுநாறறததோடுகூடவுங்கூடுதற கரிதாகியவொளிமிகுதியையுடையவனலோடுகூடவு மொநதான்மைதீமைசெயதலெனறுகூறுய்,இவைமெல்லாமொருபொருட்கியல்பாமாதலாற பூதகுணமெனறிககனமமிலலை. எ-று (ஞானம) தோல்முதலானவைகருபபைககணடாரகருணடு நீகூடினளெங்குநதுமவருவது பதாரததவியலபொழிநதுவேறுகன்மத்தால்வருவதலல, சாவுமபதாரததவியலபெனறறிவாயாக.

செய்திடுஙகனமமெனறுஞசெய்யுண்முநதலிச்செயயுளகாறு முறையானேகன்மமில்லையெனறுமறுத்துககூறிற்று. (௧௦)

காயத்தின்குணமதன்றிககண்டசான்மாவுண்டாயின்,
மாயத்திற்சொலலிடாகேமனமுதலாறினுக்கு, நேயதத
தாகவேண்டுமன்றியெரிகழததுமுண்மை, தேயததின்
முயற்கொமபெல்லைசெப்புவோசெய்தியாமே. (௧௧)

(இ-ள்.) காயத்தின்குணமதன்றி. எ-து. நூறுகாயவடைகூடவேயொருசிவப்புண்டாமாறுபோலப பூதக்கூட்டத்திலோருணாவுண்டாம். அஃதன்றி,— கண்டதான்மாவுண்டாயின்.

எ-து. மற்றோரான்மாவென்றுதனியேகாணப்பட்டதுண்டாயி ன,—மாயத்திறசொல்லிடாதே. எ-து. உண்மயககநூலிறசொ லலாதே,—மனமுதலாறிலுககுநேயததாகவேணடும.எ-து. ம னககாடசிமுதலாயவாறுகாடசிககும பொருந்தசசொல்லவேண டும்,—அன்றியே நிகழ்ததுமுணமை. எ-து. காட்சிவிகறபத்தா லொழிந்து கருதலாலு முனாயாலுங்கூறுமது,—தேயத்தின்மு யறகொமபெல்லைசெபபுவோாசொநியாமே. எ-து. உலகத்திற கோடில்லாதமுயலுககுககோடு மதறகளவும பெருமையுங்கூறு வோாதுகூறறும். எ-று. மனமெனப தையககாடசியை. நேய மென்பது பொருத்தம்.

இசசெய்யுண முறையானே காயத்தின்குணமன்றியான் மாவிலலையெனறுமறுகதுசகூறிறறு (௧௧)

---

காயத்திறகுணமதனறி. எ-கு. சரீரததினகுணமாகியவா காரப் பிரததினா பயம மைதுாமெனனுமானகுமொழிய, எனறூர் ஞானபபிரகாசா.

---

அருவமேயிறைவனுகிலறிவின்றுகாயாமாகு, முருவ
மேயென்னிறபூதககூட்டததிலொருவனுகு, மருவியவி
ரண்டுங்கூடிநிறபவனெனளினமண்மே, விருவிசும்பொ
ருகல்லேநதிரிற்குமோவியமபிடாயே. (௧௨)

(இ-ள்.) அருவமேயிறைவனுகிலறிவினறுகாயமாகும்.எ-து. காத்தாவருபியென்றுகூறி லறிவுமில்லையா யாகாயமபோலவா ம,—உருவமேயென்னிறபூதக்கூட்டததிலொருவனுகும். எ-து. அந்தககாத்தாவுருவமுடையவனெனறுகூறிம பூதககூட்டததி ந்றேன்றுஞ்சரீரியாதல்வேணடும்,—மருவியவிரணடுங்கூடிநிற் பவனென்னில்.எ-து. பொருந்தியருபாருபததோடுங்கூடிநிறபவ

னென்றுகூறில்,—மண்மேலிருவிசும்பொருகலலேந்திநிற்குமோ வியபபிடாயே. எ-று. மிககவாகாயமாகியவருபத்திலே யுருப மாகியகல்லேவிடடாற நமமிறகூடிநிற்குமோ பிரபஞ்சத்தினில லாதாகையா லருபாருபஙகூடிநில்லாது. எ-று.

இசசெய்யுண் முறையானேபூதமேதெய்வமன்றி மற்றொருதெய்வமில்லையென்றுமறுததுககூறிறறு. (௧௨)

பூதத்தேயன்னமாகியன்னததாலுடமபுபுத்தி
பேதித்தேமனமுமாகிபபிரிந்தமைதிருந்தவின்று [ங
வேதத்தேயுணாக்கவென்னேமேதினியோாகளெல்லா
கேதத்தேவீழ்ந்துவேறுநெறியலகேட்குமாறே.(௧௩)

(இ-ள்) பூதத்தேயன்னமாகியன்னத்தாலுடமபுபுததிபேதித்தேமனமுமாகிபபிரிநதமைதிருந்தவின்று வேதத்தேயுணாகக எ-து பிருதிவிபூததேயுணவுதோனறி யவவுணவாலுடலு மவ்வுடலிலேபுத்தியும் புத்தியிலேபேதிககபபடடமனமுமுண்டாய் வேறுபடடவறறை யிபபொழுதுதெரியத் தங்களவேதஞ்சொல லும்வழியும்,—என்னேமேதினியோாகளெலலாங்கேதத்தேவீழ நது வேறுநெறியலகேட்குமாறே. எ-து. தஙகளவேதமபபடிச சொல்லவும் பிரபஞ்சத்திலுளளோாகளெல்லாம் வருத்தத்திலே வீழ்ந்து வேறுவழியல்லாவகைகயககேட டதனைமேற்கொள்ளு மாறெனனே. எ-று. புத்தியுமெனவும்மைதொககது. பிரிதல்-வேறுபட்டிறத்தல்.

இச்செய்யுள பூதத்திலேயாவையுந்தோன்றி யதனிலேயொடுங்குமுரைமையேயன்றி வேறொருபொருளில்லையென்பது கூறிறறு (௧௩)

போகத்தைமண்ணிற்கண்டுவிட்டுப்போய்விண்ணிற்
கொள்ள, மோகததராகியல்லன்மூயன்றுழன்மூடரொல்

ளாந், தாகத்திற்றண்ணீர்கண்டுவிட்டுப்போய்த்தண்ணீர்கேட்டுச, சோகித்தேயுண்ணவெண்ணித்துயருறுவார்களந்தோ. (௧௪)

(இ-ள) போகத்தை மண்ணிற்கண்டுவிட்டுப்போய. எ-து: பூமியிலே மெய்யாகஸ்ரீபோகத்தைக்கண்டிருந்து மதனையநுபவியாதுவிட்டுப்போய்;— விண்ணிற்கொள்ளமோகத்தராகியல்லன்முயன்றுழன்மூடரெல்லாம். எ-து சுவர்க்கத்திலேபோகமுண்டென்றுகேட்டு அதனைக்கைக்கொள்ளுந்தற்காசையுடையராய்த் தவமென்னுஞ்சிறையிலேமுயற்சிப்பட்டுத் தடுமாறுமறிவில்லாதவரெல்லாம்;— தாகத்திற்றண்ணீர்கண்டுவிட்டுப்போய்த்தண்ணீர்கேட்டுச்சோகித்தேயுண்ணவெண்ணித்துயருறுவார்களந்தோ. எ-து தாகித்தவிடத்தேதண்ணீரைமெய்யாகக்கண்டிருந்தும் அதனையுண்ணுமறதைவிட்டுப்போய் மற்றொருதண்ணீரையொருவன்றாரத்திலேயுண்டென்ன வதனைக்கேட்டுத்தண்ணீரையுண்டுதாகந்தீரவேண்டுமென்றுபோய் வழியிலேதுயருறுவோர்தன்மைபோலும், ஐயோ! எ-று அந்தோவென்பதிரக்கக்குறிப்பு

இச்செய்யுள் காணப்படுமஸ்ரீபோகத்தைக்கைவிட்டுக் காணப்படாதசுவர்க்காதிபோகத்தைக்கேட்டதற்குவருந்துதலறிவன்றென்று கூறிற்று (௧௪)

---

போகத்தை மண்ணிற்கண்டுவிட்டுப்போய் விண்ணிற்கொள்ள மோகத்தராகியல்லன்முயன்றுழன்மூடரெல்லாம். எ-து அடையாபரணஞ்சந்தனங் குங்குமகஸ்தூரி சுகந்தமாலிகைகளோடுங்கூடவனிதையர் சங்கசுகபோஜநாதிபோகங்களைபூமியினகட்பிரத்தியக்ஷமாகக்கண்டிருந்தும் இவையிற்றுக்கு மேலான

சௌக்கியமில்லையென்றெண்ணாதிவற்றைவிட்டுப்போய்ச் சுத்த மிர்தணையாகியசுவர்க்கத்தபோகங்கொள்ளவதற்கேற்றவநுஷ்டா னங்களைப்பண்ணவேணுமென்றுபிராந்தராகி மிகவுங்கிலேசப்பட்டு முயாசசிபண்ணுகிறதுமறிவுகேடல்லாம யாவர்க்கொப்பென னில்,—தாகத்திற்றண்ணீர்கண்டுவிட்டுப்போய்த் தண்ணீர்கேட டுச்சோகித்தேயுண்ணவெண்ணித் துயருறுவார்களந்தோ எ-து. வெய்யிலிலேதூரவழிநடந்திளைத்துத்தண்ணீர்தாகமிகுந்தபோத ய்விடத்து நல்லகுளிர்ந்தஜலமானதிருக்கவதனைவிட்டப்பாற போய்க்கண்டபேரையெல்லாமொட்சேதண்ணீருண்டென்றுகே ட்டுச்சோகமுற்றுப்பிரயாசப்பட்டுத்திரிந்துகானலைத்தண்ணீரெ ன்றுண்ணவிருப்பிச்சலாப்படும்பேதையோர்க்கொக்கும்,ஐயோ! என்றிரங்காநின்றனர் எ-று. இதுஞானப்பிரகாசர்கூறியது.

---

வாழ்வேவல்லைவாமி வலக்கைக்காவென்னுயிர்க்கு
த், தோழனீயுன்னையொப்பார்சொல்லிடினில்லைகண்டா
ய, கோழைமானுடாதிதெனனுங்கொலைகளவாதிகொண்
டே, சூழும்வாய்குழலாய்மொய்ப்பச்சுடயோனத்தோன்றி
ஞயே. (௧௫)

(இ-ள்.) வாழ்வேவல்லைவாமிவலக்கைதா. எ-து. இவ்வுலத்து ளமைமைபோலநீயுமவாழ்வல்லை வாமதந்திரியேயுனவலக கையைத்தருவாயாக,—என்னுயிர்க்குத்தோழநீயுன்னையொப்பா ர்சொல்லிடினில்லைகண்டாய எ-து.என்னுயிர்க்குத்தோழனீயே யன்றிச் சொல்லுங்காலத்துவேறில்லைகண்டாய்,— கோழைமா னுடாதிதெனனுங்கொலைகளவாதிகொண்டே. எ-து. மனமில் லாதமனுடர் பொல்லாங்கென்றுசொல்லப்பட்டகொலைகளவுமு தலியவற்றை யாங்கைக்கொள்ளுமுறைமைபோலக்கைக்கொண

# யோகாசாரன்மதம்.

போதமேபொருளாய்த்தோன்றும் பொருளதாயெழலா
வாதனையதனாற்கூடிவருதலால்வடிவிலாமை [றபோதம்
யாதலாற்கனவேபோலுஞ்சகமுளதறிவேயாமென்
றோதினானேதானாயவுணர்வினால்யோகாசாரன். (க)

(இ-ள்.) போதமேபொருளாய்த்தோன்றும்பொருளதாயெழலாற போதம்வாதனையதனாற்கூடிவருதலால் வடிவிலாமையாதலாற் கனவேபோலுஞ்சகம். எ-து. அறிவேயிந்திரியங்களுமாய்த் தோன்றப்பட்டவுருக்களுமாய்வருதலானு மவ்வறிவிந்திரியவாதனையினாலேகூடிவருதலானு மவ்வறிவரூபமாதலானும் அநித்தியரூபமாகிய பிரபஞ்சம சொற்பனம்போலும்,—உளதறிவேயாமென்றோதினானேதானாயவுணர்வினால் யோகாசாரன். எ-து. அந்நுவயம். சாத்திரத்தையதிகரியாதவறிவினையுடைய யோகாசாரன் சௌத்திராந்திகளின்வேறுபட்டு இந்திரியவாதனையாலறிவுண்டாமென்றும் பிரபஞ்சங்கனவேபோலுமென்று மறிவேயுள்ளதென்றுங் கூறினான் எ-று.

இச்செய்யுள்யோகாசாரன்மதங்கூறிற்று. (க)

---

இவன்முற்கூறிய சௌத்திராந்திகன்மதமும் பக்ஷமாகக் கொண்டு பின்னும்விசேஷவுணர்வாகச்சொன்னானெனக்கொள்க என்றார்ஞானப்பிரகாசர். மற்றொருவர் இவன்சௌத்திராந்திகன்கோட்பாடெல்லாமுட்கொண்டு அவற்று ளறிவேயுள்ளது, மற்றப்பொருள்களெல்லா முருவமாகவில்லை, அறிவுவாதனையினா லுருவமாகவுண்டென்றுகொண்டவாறுகாண்க என்றார் சிலர்யோகாசாரனைமகாயானிகனென்றுங்கூறியிருக்கின்றனர்.

---

யோகாசாரன்மதமுற்றிற்று.
பாயிரமுட்பட்செய்யுள் —கஉச.

## யோகாசாரன் மதமறுதலை.

போதமுந்தவிரவேறேவாதனைபுகன்றாய்போதம்
வாதனையிரண்டுண்டென்றாயபோதம்வாதனையுமென்னிற்
காதலாற்பொருளினோடுகலந்தபினெழுங்கருத்தாம [ற
வாதனைகனவுகண்டபொருளின்மேல்வருங்கருத்தே.(௧)

(இ-ள்,) போதமுந்தவிரவேறேவாதனைபுகன்றாய். எ-து யோகாசார நீயறிவுமொழியவேறொருவாதனை யுண்டென்றுசொன்னாய். அப்படியாயின,—போதம்வாதனை யிரண்டுண்டென்றாய். எ-து. போதமென்றும் வாதனையென்றுமிரண்டுண்டென்று கூறாய்,—போதம்வாதனையுமென்னில் எ-து. வாதனைதானுமறிவேயென்றுகூறின்,— காதலாற்பொருளினோடு கலந்தபினெழுங்கருத்தாம் வாதனை. எ-து அறிவுசத்தாதிவிடயத்திலே சலக்கவேணுமென்னுமிராகத்தாற மலக்க வக்கலப்பிலே பலகாறசெலுத்துதல்காண்வாதனை. ஆகையால் வாதனையறிவன்று,—கனவுகண்டபொருளின்மேல் வருங்கருத்தே. எ து. கனவாமது கனவிற்கண்டபொருளின்மேற் கருத்துச்செலுத்துவதாதலாற பிரபஞ்சங்கனவுமல்ல, அதனால. நீகூறியது மித்தையேயாம். எ-று. மித்தை-பொய். (௧)

---

அறிவும்வேறு, வாதனையும்வேறு. மெய்யாகக்காணப்படும பிரபஞ்சத்தைக்கனவுபோற் பொய்யென்றலகூடாது. என்பதாம் என்றா ஒருணாயாசிரியா.

---

அறிவதேபொருளதாயினகஞ்சடமென்னவேண்டும்
பிறிபொருளாகுமபேதித்திதம்பிரபஞ்சமென்னி [குஞ்
லுறுபொருளுருவந்தோய்ந்தா லுணர்வுமவ்வுருவாயசிற
செறிபொருளதுவாய்நிற்குந் தெளிபளிங்கதுவேபோல.

(இ-ள்.). அறிவதேபொருளதாயின் எ-து. யோகாசாரன் கூறியவறிவுதானே பிரபஞ்சரூபமென்றுகூறின்,— அகஞ்சடமென்னவேணும். எ - து. ஞானுடமபென்று சொல்லவேண்டு ஞ்சடங்கள்;—பிறிபொருளாகும். எ-து. அறிவுமுருவும் வேறுபாட்டையுடைத்து,—பேதிததிநம பிரபஞ்சமென்னில். எ-து.அறிவுமுருவும் வேறுபாட்டையுடைத்தாமென்னி லுருவைகீங்கினை றறிவுதானே ஞானபொருளென்றுகூறும பகுதியாம்,—உறு பொருளுருவகதோயநதா லுணாவுமவ்வுருவாயநிற்கும் எ - து. அறிவுமுருவுகீகூறியதன்றி யறிவுருவததோய கூடினுலுருவந்தாஞயநிறகும். அஃதென்போலவெனனில,—செறிபொருளதுவாய்நிற்குந் தெளிபளிஙகதுவேபோல. எ-து. அடுததவன்னந்தோய்கூடியபளிஙகு மவ்வன்னநதாஞகத் தோனறுமாபோல வறிவுருவத்தோடுகூடிஞ லுருவந்தாஞகநிறகுங காண. எ-று.

இசசெய்யுளிரணடும யோகாசாரன்மததளை மறுத்துக்கூறிறறு (௳)

பளிஙகுமதணேயடுததபொருளுமவேருனூரபோல வறிவும் பொருளும்வேறென்றறிக. அன்றியும் அறிவானதருபமாயுள் ளேயிருககும் பொருளானதுருவாயபபுறமபேயிருககுமாதலாலும்வேறெனககொள்க. இவனும்பிடகசாதநிரத்திற் றன்மிதன் மத்தைப்பேதித்துநின்று சொல்லாநிறபனெனக்கொளக. "போதம்பொருளேற் பொருள்விருமபினுள்வனததும், வாதைப்பட்டவேன்பொய்வந்து." "காண்டலநுமானஙகதைககும்விருத்தங்கா, ணீண்டுநீசொன்னவிழுக்கு" "போதமும்வேறுபொருள்களும்வெவ்வேறு, பேதாய்நின்கொளகைபிழை." என்னுந் திருவாக்கினுங்கண்டுகொள்க என்றுாஞானப்பிரகாசர். மற்றொருவா, அறிவதேபொருளதாகில். எ-து. அறிவுதானேஅறியப்படும் பொருளாயிருககுமென்று யோகாசாரனீசொல்லில்,— அகங்கட

மென்னவேணும். எ-து. ஒருவன்கட்டத்தையறிந்தகாலத்து நா ன்கடமென்றுசொல்லவேணும். அவ்வாறின்மையால,—பே தித்திதம்பிரபஞ்சமென்றல் பிறிபொருளாகும். எ-து. வேறுபடு ததியிதுபிரபஞ்சமென்றறிந்தால் அறிவு மறியப்படும்பொருளு மொன்ருகாதுவேருகும்பொருளாம் எனப்பாடபேதமும தெளி பொருளும் விளங்கவோதினா. இதம்எனனுமவடமொழி இது என்னுமபொருட்டு

---

யோகாசாரன்மதமறுதலை முற்றிற்று.
பாயிரமுட்படசெய்யுள்—கஙசு.

## மாத்மீகன்மதம்.

**அவயவம்பொருளாயத்தோன்று மவயவமொழிந் தாற்பின்னே, யிவைபொருளென்னவேறென் றிலாமை யாறபொருள்களின்று, மவைபொருளிலாமையாலேயறி வுமின்ருகுமென்று, நவைதருமொழியிஞலே நவிலுமா த்மீகன்ருனே.** (க)

(இ-ள்.) அவயவம் பொருளாய்த்தோன்றும். எ-து. இந் திரியம்பத்தும் பொருளாய்த்தோன்றும,— அவயவமொழிந்தா ற்பின்னே யிவைபொருளெனன வேறென்றிலாமையாற பொ ருள்களின்றும். எ-து. இந்திரியங்கள்கெட்டாற் பொருளிவை யென்றறிதற் கிலாமையாற் பொருளுமில்லையாம்,—அவைபொ ருளிலாமையாலே யறிவுமின்ருகும். எ-து. அந்தப்பொருள்களி லாமையிஞலே பொருளேக்கூடிநின்றறியு மறிவுமில்லையாம்,— என்றுநவைதருமொழியிஞலே நவிலுமாத்மீகன்ருனே. எ-து. என்றிப்படிக்குற்றத்தைத் தருஞ்சொல்லாலே மாத்மீகனசெ

ல்லுவான் எ-று. பொருளென்பது சரீரம், அவயவியில்லையென் பது கருத்து.

இச்செய்யுள் மாதமீகன்மதங்கூறிற்று. (க)

சௌத்திராந்திகன்மதத்திற்சிறிதுசொனவு அறிவு மறியப் படும்பொருளுஞ் சூநியமாதலி னுலகஞ்சாபிற்றேன்றுவதுமி ல்லை என்பதவனுட்கோள என்றுரோருளையாசிரியா.

---

மாத்மீகன்மத முற்றிற்று
பாயிரமுட்படசெய்யுள்—கநஎ

## மாத்மீகன்மதமறுதலை.

கடத்தினிலவயவங்கள்படத்தினிற்புகாமற்காத்தும், படத்தினிலவயவங்கள்கடத்தினிற்புகாமற்கொண்டு, மி டத்தினினிற்குமாகுமவயவியிரண்டுங்கூடி,யுடைத்தொ ருபொருளுண்டாகபொருளுமுண்டுணாவுமுண்டே()

(இ-ள்) கடத்தினிலவயவங்கள் படத்தினிற்புகாமற்காத் தும் படத்தினிலவயவங்கள் கடத்தினிற்புகாமற்கொணடு மி டத்தினினிற்குமாகுமவயவி. எ-று. மாத்மீக நீயவயவமேபொ ருளாவது அவயவியில்லையென்றுகூறினை; கடாதிகளினவய வங்கள் படாதிகளிற்செல்லாமை நீக்கிக்கொணடும், படாதிகளி னவயவங்கள கடாதியிற்செல்லாமை நீக்கிக்கொண்டும், அவ் வவ்வவயவங்களிலே யவ்வவ்வவயவிகிற்குமாகையால்,— இர ண்டுங்கூடி யுடைத்தொருபொருள் எ-து. அவயவமுமவயவி யுங்கூடியே யொருபொருளாகவுணடாவது,— உண்டாகப்பொ ருளுமுண்டுணாவுமுண்டே. எ-து. அப்படியுண்டாகவே யது

போலப் பொருளாகியசரீரமுண் டுணர்வுமுண்டென்றறிவாயா க எ-று. கடாதிகட்கவயவி மண படாதிகட்கவயவி நூல். பொருள் அவயவம். உணர்வு அவயவியாகியவானமா. (க)

---

கடத்தவயவம்படத்திற்காகா படத்தவயவம்கடத்திற்காகா. அந்தந்த வவயவங்களிலே யந்தந்தவவயவியே யுண்டாயிருந்து தோன்றும். இஃதன்றி யவயவமேபொருளாய்த்தோனறுமா னல் ஒருபொருளுக்கானவவயவத்தில் எல்லாப்பொருளுந்தோ ன்றவேண்டும். அஃதில்லாமையா லவயவந்தானேபொருளல் ல, அவயவம்வேறு பொருளும்வேறெனக்கொள்க என்றார் ஞா னப்பிரகாசா.

---

கருவியுமொளியும்வேறு கருதிடுங்கருத்துநிற்கப்
பொருள்புணராமையாலே போதமவந்தெழுவதின்று
மருவிடும்பொருளுண்டாக வந்தெழுமபுந்தியாலுற்
பொருளுளதாகுமாகப் போதமுமுளளதாமே. (உ)

(இ-ள்.) கருவியுமொளியும்வேறு கருதிடுங்கருத்து நிற்கப் பொருள்புணராமையாலே போதம்வந்தெழுவதின்றும். எ-து. இந்திரியங்களு மிந்திரியவிடயமாகிய சத்தாதிகளு மதனுற்கா ணப்படும் பொருள்களைவேறுபடவாராயு மந்தககரணங்களு மு ண்டாய்நிற்கவு மான்மாவந்துகூடா ததுகொணடொருபொரு ளையுந் துணிந்தறியுமறிவில்லையாம்,— மருவிடுமபொருளுண்டா க வந்தெழுமபுந்தியாலுல். எ-து. இந்திரியவிடயஙகளோடு மந் தக்கரணஙகளோடுங் கூடிநின்றறியு மான்மாவுண்டாக வறிவுமு ணடாமாகையால்,— பொருளுளதாகுமாகப் போதமுமுள்ளதா மே. எ-து. ஆன்மாவுணடாகும. அஃதுண்டாகவே யறிவுமுள் ளதாம். எ-று. இவ்விடததுப் பொருளென்ற தானமாவை.

இச்செய்யுளிரண்டு மாத்மீகன்மதத்தை மறுத்துக்கூறிறறு.

பொருள்புணராமையாலே என்பதன்முன் சுழுத்தியில்லன வருவித்துரையுரைத்துக்கொள்க. இவ்விரண்டுசெய்யுளுஞ் சூநி யமென்பதைமறுத்து அவயவத்திற்குவேறாயவயவியுமறிவுமுள வென்றுகூறிற்று

மாத்மீகன்மதமறுதலை முற்றிற்று.
பாயிரமுட்படசெய்யுள்-கஉ௬.

# வைபாடிகன் மதம்.

அரிசன நூறுகூடவருணம்வந்தெழுந்தாற்போல
விரிசகமபொருள்கண்ஞானமவிரவிடமேவித்தோன்றுந்
தெரிசனமிதுவேயென்றுதெளிந்திடுநேராவீடு
பரிவொடுமடைவீரென்றுபகரும்வைபாடிகன்றான். (க)

(இ-ள்.) அரிசனநூறுகூட வருணம்வந்தெழுந்தாற்போல எ-து. மஞ்சளுஞ்சுண்ணமும்புங்கூட வோர்சிவப்புத்தோன்று மாபோல,—விரிசகம்பொருள்கணஞானம் விரவிடமேவித்தோ ன்றும் எ-து. காணப்பட்டபொருள்களு மிந்திரியவிடயமானவ றிவுங்கூடினபோதுபிரபஞ்சப்பொருள்கடோன்றும்,—தெரிசன மிதுவேயென்று தெளிந்திடும். எ-து. இதுவேஞானதெரிசன மென்று தேறுவீராக,—நேராவீடுபரிவொடுமடைவீரென்றுபகரு ம்வைபாடிகன்றான். எ-து. அப்படித்தெளிந்தீராயின் புத்தர்வீ டெருமின்பத்தை யடைவீரென்றுபரிவோடுஞ் சொல்லாநிற்ப ன், வைபாடிகன். எ-று.

இச்செய்யுள்வைபாடிகன்மதங் கூறிற்று. (க)

இவனுமாத்மீகனும்பௌத்தர்மதபேதகமெனக்கொள்க என்றாஞானப்பிரகாசர். மற்றொருவர், பொருள்கண்ஞானம்வ

ன்பதனை பொருள்ஞானங்கள் எனப்பாடமோதி, கடம்படமுத லியபொருள்களு மவற்றையறியுமறிவும்,—விரவிட எ-து. கல க்க,—விரிசகமேவித்தோன்றும். எ-ம். சௌத்திராந்திகன்சொ ட்பாட்டிற்கிறிதுகொண்டு ஞானமும்பொருளு மிசிரமாயிருப்ப தேயுலகமென்றுகொள்வதவன்கருத்து. எ-ம். கூறினா.

---

வைபாடிகன்மத முற்றிற்று.

பாயிரமுட்பட செய்யுள்—கசO.

---

## வைபாடிகன்மதமறுதலை

**பொருளதுபுறம்பதாகும்போதமந்தரமதாகுந**
**தெருளிடினிரண்டுஞ்சென்றுசோ்ந்திடுமாறதின்று**
**மருவுணர்வுருவஞேயமாதலினுலுங்கூடா**
**வுருவருவுடையவைபாடிகற்கினிமாற்றமின்றே. (க)**

(இ-ள்.) பொருளதுபுறம்பதாகும் போதமந்தரமதாகுந்தெ ருளிடினிரண்டுஞ்சென்று சோ்ந்திடுமாறதின்றும். எ-து. அறி யப்படும் பொருள்புறத்ததாகும, அறியுமறிவகத்ததாகும். ஆதலா ற்றெளியவறியுமிடத் திரண்டுஞ்சென்று கூடுந்தொழிலில்லையா ம்,—அருவுணர்வுருவஞேய மாதலினாலுங்கூடா. எ-து. அன்றி யு ஞானமாகியவறி வருபமாகையாலும், ஞேயமாகியபொருளு ருவமாகையாலுங் கூடாது,—உருவருவுடைய வைபாடிகற்கினி மாற்றமின்றே. எ-து. உருவுமருவுங்கூடுமென்ற வைபாடிகனுக் கினிச்சொல்லுமுத்தரமில்லையாம். எ-று. உணர்வுடையனென்ற திழிவின்கண்வந்தது. பொருள் பிரபஞ்சம், ஞேயமுமது.

**இச்செய்யுள் வைபாடிகன்மதத்தை மறுத்துக்கூறிற்று.(க)**

உருவருவுடையவைபாடிகன் எ-னே. மருளுணர்வுடைய வைபாடிகன்எனப்படாடமோதி பிராந்திஞானமுடைய வைபாடிகன். எ-ம். "இல்லையதீதத்திலெனணமூலகபபோ, இல்லையோ சொலலாயெனகசூ" எ ம். "அபிதனப்பொருளன்றிப்பொருளென்றெழியகணிகமடங்கலும்." எ - ம். க்ஷணபங்கமாத்திரமேநிலையுடையன. எ-ம். ஞானமொன்றுமேபொருள். எ-ம. விவகாரவகையான்மா எ-ம் அவாசியமேபொருள். எ-ம். சூநியமேபொருள எ-ம். இபபடிப்புலவாகச்சொலலவெனகொள்க எனககூறினா ஞானபபிரகாசர். மறறொருவா, "இபபடியிறைவாதம்பாலெய்தியவரயகளாலே, முப்புரத்துள்ளாரெல்லாமூவுலகழிகருமாற்றுற், றப்பதலகுறிதறுகக்ணன் சாாநதுாரதாதமமோடுஞ், செப்பியமதங்களுனகுர தீா. டவுளாதநவாறே." என்றதும் ஞானவரணவிளககத்திருவிருததததாற புத்தாமதவரலாறுகாண்க என்றா

வைபாடிகன்மதமறுதலை முற்றிறறு.
பாயிரமுட்படசெய்ய —௪௬௪.

# க்ஷமணாில்றிகண்டவாதிமதம்.

வாசமாமலாசோகுபேணிமறை நீதியோடுமலையுந
தவத, தாசையாலுடையகணறுமாசினேயடைந்தில்வாழு
தருமறநதினிற, ப்ரசமானதுதவிாந்துபண்டிடபடவுண்டு
பாயிறெடுபீலியே, ளேசமாயவைதரிந்துளோாகளினி
கண்டவாதியைநிகழுத்துவாம. (௧)

(இ - ள்.) (வாசமா—நிகழ்த்துவாம்.) மணமும்வணமும் பொருந்தியமலர்களையுடைய வசோகவிருட்சத்தைத் தெய்வம

போலப்பேணி வேதமாக்கத்தோடு மறுதலைப்பட்டோர்க்குந்த வத்தினையாசைப்பட் டுகைகையைக்கைவிட்டுக் குளிக்குந்தன் மையின்மையி னழுக்கடைந்து பிரமசாரியமுதலாகிய வாசிரம மூன்றுகரும் பற்றுயிருக்கிற கிரகத்தாச்சிரமத்தைவிட்டு வயிறு பெருக்கவுண்டு பாயுடுத்துப் பீலிகைபபிடித் திங்ஙனஞ்சொலலி யவறறிலேசிநேகமா யவையிற்றைத்தரித்துளோர்களி னிகண் டவாதி மதத்தைச்சொல்லுகின்றேன் எ - று

இச்செய்யுள் நிகண்டவாதிமதங்கூறுவா னவனித்தன்மை யனென்றுகூறிற்று. வாசமாமலா, வாசம - நாறறத்தையும், மா - வண்டையுமுடையமலா. கண்டம் உடை நிகண்டம் உடையி ன்மை. அஃது க்ஷமணரில் நிகண்டவாதியெனக்கொள்க. ஆசீவ காக்குடையுளவாம். மறைநீதியோடுமேலையுந்தவம எக்கியாதிகாம ங்கொள்ளாமையாலுங கதகிருவாநருசொல்லாமையாலும் புன் மருதகிராக்ஷமிலலாமையாலு மெனககொள்க. (க)

நேசமாயவைதரிததுளோரமூவா. அவா, நிகண்டவாதி, ஆ சீவகன், அறுவாதிஎன்போர. நிகண்டவாதி. எ - து. காரணப் பெயா. நிகண்டவாதிமதத்திற்கு நிகண்டவாதிஎன்றது ஆகுபெ யா. "நனிவிரும்பிநிலத்தியாவருநாளுமியாகமியற்றியே, மணி தராகியுமவிண்ணடைந்திடவருதல்கணடுதவிாத்திட, யினிவை நீகமுகமூன்றினுமேற்றமாமமணாமத, முனிகணந்தொழுநான் முகன்சொலுமூன்றுபேதமுமோதுவாம் " என க்ஷமணர்மூவரு மவர்வரலாறுஞசணடுகொளக. என்றுரோருவாசிரியர்.

**ஈறிலாதனவநாதஞானமுத லெண்குணங்களெனு மொண்குண, மாறிலாதமதிமேவுசீதமென மனனிவான வர்வணங்கவே, வேறுலாவுகுணஞானமாவரணி யாதி**

**யெட்டினையும்விட்டசீ, ரேறுபான்மையுடைநீடுவாழரு கனெங்களுக்கிறைவனென்றனன். (உ)**

(இ-ள்.) ஈறிலாதனவநந்தஞானமுத லெண்குணங்களினு மொண்குண மாறிலாதமதிமேவுசீதமெனமன்னி. எ-து. கேடில்லாதனவான வநந்தஞானமுதலிய நற்குணமெட்டையு மதிக்குக்குளிர்ச்சிதன்னிடத்திலே தோன்றிநின்றொப்பத் தோற்றுவித்து,— வானவாவணங்கவே வேறுலாவுகுண ஞானமாவரணியாதி யெட்டினையும்விட்டசீர். எ-து. அந்தநற்குணங்களோடு கூடாத பரந்தீக்குணங்களென்று சொல்லப்பட்ட ஞானாவரணியமாதியாகிய வெட்டுக்குணங்களையுமவிட்ட வழகினையுடையனாய்,—ஏறுபான்மையுடை நீடுவாழருக னெங்களுக்கிறைவனென்றனன். எ-து. இந்திராதிதேவர்கள்போற்றமிக்கபான்மையையுடையனாய் நெடிதுவாழ்கின்ற வருகபரமனெங்கள் கர்த்தாவென்றுகூறினான். எ-று. வானவாவணங்க. எ-னை. ஏறுபான்மையுடையனென்னுஞ் சொற்குமுன்னே கூட்டுக. நற்குணமெட்டாவன—அநந்தஞானம, அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்கோத்திரம், நிராயுஷ்ஷியம், சம்மியதாபாவம், என-அ. சமமியதாபாவம அழிவின்மை. ஞானவாணியமெட்டாவன—ஞானவர்ணியம், தரிசனவர்ணியம், வேதநீயம், மோகநீயம, ஆயுஷ்ஷியநாமம், கோத்திரநாமம், ஆயுவந்தராயம், காயவந்தராயம், எனவெட்டாம். இவையேதீக்குணங்களென்றும் பெயர்பெறும. சிலபிரதிகளுள், மதிஞானவாணீயம், சுருதிஞானவாணீயம், அவதிஞானவாணீயம, கேவலஞானவர்ணீயம், சக்ஷு-தரிசனவாணீயம், அசக்ஷு-தரிசனவாணீயம், அவதிதரிசனவர்ணீயம், கேவலதரிசனவர்ணீயம் ஆ அ எனக்கூறியிருக்கின்றன. சீரோறுபான்மை. எ-து நின்மலத்துவமுதலியன.

(ஏ.

மாறிலாதமதி எ-கு. வேறுபாடில்லாதபூரணசசந்திரன். எ-ம். நீடுவாழருகன். எ-கு. நிதநியனுய்நிலைபெற்றவருகபரமே ட்டி. எ-ம். மோகநீயம். எ-கு. யோகநீயம். எ-ம். சிறோறுபா ன்மையுடையன். எ-கு. நிாமலனுய், சாவஞ்ஞனுய, தேவாக ளாலேநிாமிதமானசிஙகாதனமும, பிரகாசமண்டலமும், சாவய ரிமளமும், சமஸ்தஜீவன்களுககுமித்திரபாவமும், சந்தோஷப் பிரவிருத்தியும், பதிஞுனகதிசயமும், சுவாககதாநமும், மகாபபி ரசவாநஙகேவலோறபததிபசிநிருவாணமென்றும் பஞ்சகலியா ணசகிதனுமாகி அறபதசதிாஞமாகி அற்புதமகிமையுடையவனு மாகியுள்ளானெனறதெளககொள்க எனறா ஞானபபிரகாசா. மற்றொருவா அருகனுககுசசகலாந்தன் என்றும்பெயா எ-ம்.நீக குணத்தில் ஆயுஷஷியநாமம்,கோததிரநாமம்,ஆயுவந்தராயம்,கா யவந்தராயம், எனபதைநீககி நாமமுணமை, கோததிரமுணமை, ஆயுவுணமை, அநதராயமுணமை என்நுமிவை. அந்தராயம து ககம். எ-ம. சிராவா—நின்மலமாதல, யாவையுந்தோதல, சீல காருணணியம, சநதோஷம, பிரவிருததி ஆகியவைநதும, பதி ஞன்கதிசயமும, தேவநிருமிதசிஙகாசனத்திறபிரகாசமண்டலத திருசதல்முதலியனவாம எ-ம். என்னஎன்னு முவமையருபு எனவெனவிகாரபபடடது. எ-ம. கூறினா

கருவிகண்படுதுடககொழிநதுவருகாலமூனறினிக ழ்காரியம, பெருகநினறொருகணத்திலேயுணாபெருநத வககடவுள்பிடிஞன, மருவிநின்றுவழிபட்டவர்க்குமலே வுறறவர்க்குமனபோகதிடுமெ, குரிசிலெனகளிறைவெய றபினனுநிகழகுறறமினமையதுகூறுவான. (௩)

(இ-ள்.) கருவிகண்படுதுடக்கொழிந்துவரு காலமூன்றினி கழ்காரியம் பெருகநினறொருகணத்திலேயுணர்பெருந்தவககட

ள எ-து. (கருவிகண்படுதுடக்குகண்ணொழிந்துவருங்காலம்) எ
ணமாறுக. இந்திரியவிடயத்தால்வருந்துடககத்தைத்தன்னிடத்
துநின்றுங்கைவிட்டுப் பெருங்காலமுதலாகமூன்றுகாலத்திலுமு
ள்ளகாரியங்களை மிகவுமொருகணமாத்திரத்திலே யநந்தஞானத்
தாலே யறியத்தக்க பெரியதவத்தையுடையதேவன்,—பீடிரு
ன்மருவிநின்று வழிபட்டவாககு மலைவுற்றவர்ககு மனமொத்
திடுங்குரிசில். எ-து. தனதுபெருமையினாலே பொருந்தநின்று
வழிபாடுசெய்தவாக்கு மாறுபட்டவாக்கு மொருநீரமையானத
லைவன,—எங்களிறையென்று பின்னுங்கழகுற்றமின்மையதுகூ
றுவான். எ-து. எயகள்சுவாமியென்றுகூறி யவனுககுக்குறற
மிலலாததன்மையைப் பின்னுஞ்சொல்லுவான். எ-று. மன
மொத்திடுகை சமதரிசனமாகை. (௯)

கருவிகணபடுதுடககொழிநது எ-து. பாஹ்யாப்பியந்தர
க்ஷுங்களைநீங்கிஎன்றதாம். காலமூன்றினுணர்பெருந்தவக்கடவுள்
எ-து. "திரிலோக்கியஞ்சகலத்திரிகாலவிசயஞ்சாலோகமாலோ
ஹிதம், சாக்ஷாத்தெய்நயதாஸ்வதம, ஆதலெலொகாத்திரயமஞ்சா
ஙகுலிராத்துவேஷபயாநக, மாயாநதங்கசானலோலத்துலோபா
யோத நலமயக்குபதலம்வாநாயஸம், ஆதேவோமயா கன்னிய
தே." இதிவசனாத்எனக்கொள்க. பின்னுங்கழகுற்றமின்மையது
கூறுவான். எ-து. பதினெண்குற்றமொழிந்தவரோ விட்டவனென
க்கொள்க. இவைசகலாத்தரிலக்ஷணம. என்றார் ஞானப்பிரகாசர்.
மற்றொருவர், கருவிகண்ப்டுதுடக்கொழிநது. எ-கு. கருவி. எ-து.
உட்கருவியாகியவந்தககரணஙகளாலும்,—கணை. எ-து. புறககரு
வியாகியகண்முதலிய விந்திரியங்களாலும,—படும். எ-து. உண
டாகும்,—துடககொழிந்து. எ-து. ஐயமும்விபரீதமுமின்றி. எ-ம்
கண்முதலியவிந்திரியத்திற்குக் கண் என்றதுதலைமைபற்றியவழு

க்கு. துடக்குஎன்றது சண்டையும்விபரீதமுமாம். எ-ம். கூறினார்.

---

பசித்தருகபயசெற்றமோடுவகை மோகசிந்தனைப
ழித்தனோய், நசித்தல்வேர்வினொடுகேதமோடுமதமவே
ண்டலீண்டதிசயித்தலும், புசிப்புவந்திடுபிறப்புறக்கமி
வைவிட்டொரட்டகுணபூதனாய், வசித்தவனனுலகின
மேலிருந்தொருசொலிகலனுக்கருளுமென்றனன். (௪)

(இ-ள்.) பசித்தல். எ-து பசியுண்டாதல்,—தாகம். எ-து. ஆசை,—பயம். எ-து. அச்சம்,—செற்றம் எ-து மாற்சரியம்,—ஓடு. எ-து. இவையிற்றுடனே,—உவகை எ-து ஒன்றனைமேற் பிரியப்படுதல்,—மோகம். எ-து மயக்கம்,—சிந்தனை. எ-து. ஒன்றைச்சிந்தித்தல்,— பழித்தல். எ-து. ஒன்றைநிந்தித்தல்,—நோய். எ-து. வாதபித்தசிலேஷமம்,—நசித்தல். எ-து. சாதல்,—வேர்வினொடு. எ-து. வியர்வோடு,— கேதமோடு எ-து கிலேசப்படுதலோடும்,—மதம் வேண்டல். எ-து. காவத்தைவிரும்பல்,—சண்டதிசயித்தலும் எ-து இவ்விடத்ததிசயப்படுதலும்,—புசிப்பு. எ-து. உணவு,—வந்திடுபிறப்பு. எ-து. ஜநித்தல்,—உறக்கம். எ-து. மூவகைநித்திரை,—இவைவிட்டு. எ-து. இவை பதினெட்டையுமுற்றக கைவிட்டு,—ஓரட்டகுணபூதனாய். எ-து அநந்தஞானமாதியாகச் சொல்லப்பட்ட வெட்டுக்குணங்களையுடையனாய்,— வசித்தவன்னுலகின்மேலிருந்தொருசொ லிகலனுக்கருளுமென்றனன். எ-து. (உலகின்மேலிருந்தொருசொலிகலனுக்குவசித்தருளும்)எனமாறுக.உலகத்துக்குமேலாகியபொன்னெயில்வட்டத்திருந்து சித்தபரமேட்டிகள் கேட்டதொருசொல்லினுக குத்தரமருளுமென்றுகூறினன். எ-று. ஒடு என்னொடு, சண்டென்பதனை எல்லாவற்றோடுங்கூட்டுக. வசித்த

ல் சொல்லுதல். பிறப்பு, தேவமநுஷியநரகவிலங்கென நால்வகை. மூவகைநித்திரையாவன. நித்திராநித்திரை. பிரசலாப்பிரசலே. நிக்கிரகாநியனுக்கிரகத்தியெனக. இதறகருகன்கூறியசொல்லாவது பொன்னெயில்வட்டத்திருக்கிற சித்தபரமேட்டிஎனனும்சகலாத்தரை இகலாநதர் "தன்மம்பகவ" என்றுகேட்க, முரசுதாககச் சத்தங்கிளம்பிறறபோல வொருசொல "பஞ்சாஸ்தமயம்" என்றுசகலாத்தாசொலல இதுகொணடு விசாரித்தானெனக்கொள்க.

இச்செய்யுள்களன்மூனறு நிகணடவாகி தனனுகர்த்தாவினுடைய நிர்ணயஙகூறியவாறுகூறிற்று உலகின்மேலிருநதொரு சொலிகலனுககருளுமென்றனன் எ-று பொன்னெயில்முதல் வினைச் சித்தபரமேட்டிகேட்ப (௪)

---

இராகமின்றியிருப்போர தேசத்துபதேசஙகூடுமோவென்னில், கடிப்பினலறையபபட்டு பிறிதினையபேக்ஷியாதுமுழஙகா நின்றபடகததொனிபோலவுமவழிசேட்க இராகமின்றிவழிகாட்டுவொனியலபுபோலவும்சொலலபபட்டதெனககொள்க. "ஆசருமாரு மீரவனைவினவலின், வவைவிலபிறா னரு மனநிலைமங்ழவெயத, வுளைபலவகையிலு முறுபொருளுளவோா, முரசெனவதிருமூனவான்மொழியே." இஃதவனுடையநீலகேசி எனறா ஞானப்பிரகாசா. மற்றெருவா, மதம்வேணடல் எ-னை மதம்-செருக்கும, வேணடல்-விருப்பும், எனபபிரித்தும். புசிபபுவருகிடுபிறப்பு. எ-னை. புசிககவருகிடுபிறபபுஎனத்திருத்தி, போகம்புசிக்கவரும்பிறப்பும் என்றொருபொருளாககியும். உலகின்மேலிருந்தொருசொலிகலனுககருளுமென்றனன். எ-து. உலகத்தின்மேலாகிய பொன்னெயிலவட்டததிருந்து "பஞ்சாஸ்தமயம்" என்னுமொருசொல்லை இகலாததனுககுசசொனனவன, —

அருளுமென்றனன். எ-து. யாவரையும்ரக்ஷிப்பான்என்றுசொன்னான் என்றார்.

---

அந்தவாய்மொழியினலவன்சரணமாதியோகமுதலான நூ, லிந்தமாநிலமயங்கிடாதவகையிங்கியம்பினனி தன்பொருள், வந்தகாலமுயிர்தன்மதன்மியறமற்றுமவிண்மருவுபுற்கலம, பந்தமவீடிஞெடாதியாயிவைபடைப்பதின்றியுளபத்துமே. (ரு)

(இ-ள்.) அந்தவாயமொழியினலவன் சரணமாதியோகமுதலானநூலிந்தமாநிலமயங்கிடாதவகையிங்கியமபினன். எ-து அந்தப்பஞ்சாஸதமயமாகியவாக்கியத்தினலே யாதச்சித்தபரமேட்டிசரணமாதியாகிய முதனூலை யிப்பெரியநிலத்துள்ளோர் மயங்காதவகையிவ்விடத்துசொன்னான்,—இதன்பொருள்.எ-து இந்தநூலிற்கூறியபொருள்,— வந்தகாலமுயிாதனமதன்மியறமறறும் விணமருவுபுற்கலம்பந்தம்வீடிஞெடாதியா யிவைபடைப்பதின்றியுளபத்துமே. எ - து. உண்டானகாலம ஆன்மா தனமம் அதன்மம் புணணியம் பாவம ஆகாசம் அணுவாய்த்திரணடான்மததன்மைபொருந்தின புறகலம் பந்தம வீடொடுகூடப் பத்தும் ஒருவராற்படைககப்படாததாயநாதியேயுள்ளனவாம்.எ-து. தனமம். எ-து. தன்மாத்திகாயத்தை. தன்மி. எ-து அதன்மாத்திகாயத்தை.

இச்செய்யுள் நிகண்ட்வாதி சாத்திரங்தோன்றினமுறைமையுமந்தசசாத்திரத்திற்கூறும் பத்துவகை பதார்த்தமுங்கூறிற்று. சரணம்—ஆதிசரணம், சிததசரணம், ஆசரியசரணம், தன்மசரணம் எண-௪. மற்றுள்ளனவுங்காண்க. (ரு)

அந்தவாய்மொழி. எ-து. சகலாத்தர்கூறிய "பஞ்சாஸ்தமய ம்" என்னுமந்தவாரத்தையை. சரணமாதி. எ-து. பூர்வாகமம், அங்காகமம், வெகுசுருதிமுதலானநூல். இயம்பினன்.எ-து. இக லாத்தன் அருளிச்செய்தனன. காலமுதலியபொருளுக்கவன்வச நம். "எனக்கேட்டங்கெடுத்துரைப்பானிந்திராகடொழப்படுவா ன், றனககாய ததாமமுந்தருமமுஙகாலமுங, கனப்பாட்டிலாகா யமுயிருருவும்புணணியமே, நினைககுங்காற்பாவமே கட்டுவீடெ னநிறுத்தி." இதுநீலகேசி. இவையிறறிற்காலமாவது—சமயப் பிரசமயமாகியஅவடிக்கையும்,பிராணனும்,ஸ்தோகமும், இலவமு ம,நாழிகையும், முகூர்த்தமும், திவசமும, பக்ஷமும்,மாதமும், இ ருதுவும், அயனமும், சம்வற்சரமும், யுகமும் இவைமுதலானகற் பாநதமாகசசொல்லப்படும்பேதமும பூதபௌஷியவாத்தமான விகற்பத்து "போதலிருததல்புணாதன்முதல்வினையி, னேதுவி னைசகாலமெனவெண" என்பதும்காணக. உயிராவது—ஞான தரிசனம்; இதககிரியா சைதநநியலக்ஷணத்ததாகிய பதாரத்த ம், பிணடஜீவன், சொரூபஜீவன், சுத்திஜீவன்என மூன்றுவ கைபபடும் ஆன்மாவைவிடாத குணமயம். அவையாவன—அ ஷத்தித்துவம், ஞாத்திருத்துவம், திருஷ்டத்துவம், கத்திருத்துவ ம், போகதிருத்துவம், அதிசூக்ஷ்மததுவம், அவகாஹத்துவம், அ குருலத்துவம், அமூாத்தித்துவம், அசங்கூரப்பிரதேசத்துவம், சைதந்நியோவலம், சைதந்நியோவயோகம், சைதந்நியசமஸ் காரம், சொரூபவெதிரேகதாமம் என்னும் ஸ்வரூபாநுவயங்க ளாம். ஆன்மாவைநீங்கிவருங் குணஙகளாவன—ஞானோபலப் பியந்தாநோபயோகம், கிரியாசமஸ்காரசைதந்நியோபலம் பதி னொன்றுமாம். சாய்யசரீரபரிணுமபிரமாணுதி நின்றபஞ்சேந்தி ரியமனோவாக்குக்காயம் ஸ்வாசமாதியவற்றால் ஜீவியாநிற்பன்.

ஜீவனுத்திரம், "உடனினாந்நிற்குமுயி ருட்கரணத்தாலும், வி டயமறியும்விளாந்து." என்பதும்காண்க. தன்மாத்திகாயமாவது—சலசாகமனங்கட்குச் சலம்போலக் கெதிபரிணுமோமுகசலக்கிதையிடத்தேவா சிக்கத்திரவியபுண்ணியமு மென். அவற்றுட் பாவபுண்ணியஞ்சத்தவிதமாகும்.—காருண்ணியப் பிரசன்னபாவ குணுநுராக பிரசஸ்தப் பிரவிருதநி தபோனுபிரயோக ஞானப்பிரவிருத்தி, தியானப்பிரவிருத்தி என். திரவியபுண்ணியமென்பது—புரோட்சாகாருண்ணியாதி சுபபரிணுமபரிணதமாகியசாதவேதநீய, ஹஸ்வாதிபுருஷவேதாவேதாயுசியம் மனுவாயுசியமேகதூதிசுபநாமோசைக்காத்திரம் என்னும் புண்ணியகன்மகந்தமாகும். "பாபத்துவேதாபவதி" பாவாபாவமுந்திரவியபாவமுமெண்க. கத்திரப்பிரதனம்சத்தவிதமாகும்— அகாருண்ணியம், அபபிரசன்னபாவம, அகுணுநுராகம், அபுசத்தம பிரவிருத்தி, அத்போனபுயோகம், அஞ்ஞானபபிரவிருத்தி, அசுபதியானப்பிரவிருத்திஎன்க. ததுவதீபம்—அகாருணணிய, அசுபபரிணுமபரிணமிதமாகியஞானுவரண, தரிசனுவரணமும், அசாத்வேதநீயமும், ஹாஸ்வாதிபுருஷவேதபாசசமோஹநீயமும், நரகாயுஷிய, நியாயுஷியமும், நரகசேத்தியாத்கியசுபநாமமும், நிசைகோத்திரமும், அந்தராயமுமென்னும் பாவகன்மகந்தமாகும். அத்திதானதன்மாத்திகாயங்,காணுத்திதானகைததவதன்மாத்திகாயம். "அத்திகட்த்தன்மைபடா பாவமதனுத்திகட, மத்தியெனநாத்தியெனவாம்." "அறமின்பமாக்குமருந்துயரமாக்கு, மறமென்றுளத்தின்மதி" எனபதுமறிக. விண்ணெனறது—ஜீவாதிப்தார்த்தாவகசதனலக்ஷணத்ததாகிய அத்திததுவாந்தபிரதேசவாதிசொரூபான்னுவயதமசகிதமாகிய அஞ்ஞானத்துவாதிபிரவிருத்தியானுவிதமாகின்றப்தார்த்தமாம. "எல்லாப்பொருட்குமிடங்கொடுக்கும்வானதனி, னில்லைப்பொருளேதுமில்." என்ப

றும்றிக. புற்கலமாவது—பரிசாசுகந்தவன்னலக்ஷணத்ததாயும் திரவியபாவம். விகற்பபூரண அலனசுபாவத்ததாயும், பரமாணு ககடாமே ஸ்நிந்தசொரூபபரிசகுணங்கள் காரணமாகப்பரிசம்ப ந்தத்துவிஷயபோக்கியோபகாரணத்திரவியமாகும். பந்தமாவது —ஞானுவரணுதியாகும். ஞானுவரணீயம்பஞ்சப்பிரகாரமாததி ரம். அவை மதிஞானுவரணம், சுருதிஞானுவரணம், அவதிஞா னுவரணம், மனபரியாயஞானுவரணம், கேவலஞானுவரணமெ னவாம். தெரிசனுவரணமேலெழுவிதமாம. அவை சக்ஷுதரி சனுவரணம், அசக்ஷுதரிசனுவரணம், அவதிதரிசனுவரணம், கேவலதரிசனுவரணம், நித்திராப்பிரசலே, நித்திராநித்திராப்பிரசு லே, ஸ்தானகந்திஎனவாம் என். வேதநீயம்துவிதபேதத்தது— சாதநீதவேதம், அசாதவேதநீயம்என். மோகநீயம் துவிவிகற்ப த்தது—தரிசனமோகநீயம், சாத்திரமோகநீயம்என். தகுபிரதம மிததியாதுப்பிரகிருதியாகும். துவிதீயமதுவிப்பிரகாரத்தது—பா ஹியகாஷாயம்மனேகாஷாயம். ஆயுஷியம்சதுர்விதபேதமாத் திரம். அவை தேவாயுஷியம், மனுஷாயுஷியம், தைரியகாயுஷிய ம், நரகாயுஷியமெனவாம். நாமகனமசத்துவாரிங்சத்விகறபமா கும் இவைவிரிவிற்காண்க. வீரியாந்தராயம் ஷட்பிரகாரமாம். மனுபாவபந்தமென்பது அமிர்தவிஷவீரியசத்திபோல புண்ணி யபாவங்கட்குச்சுகதுக்கபலதே சத்திமத்து பந்தமாகும். துாவப ந்தமென்பது ஆசங்காரம்விட்டுநீங்காதசொரூபத்தால் நிரந்தரபந் தமாகும். அதுாவபந்தமாவது விட்டுவிட்டுபந்திக்கும்சொரூபத் தாற சாந்தாபந்தமாகும். இதுபநதம். மோக்ஷமென்பதிரண்டு பிரகாரமாம்,—விகற்பமோக்ஷம் சகலமோக்ஷமென். விகற்ப மோக்ஷம்சத்துவாரிங்சத்கர்மபிமுத்தமாத்திரம். சகலமோக்ஷ ம ஷடகன்மமும்விட் டஷ்டகுணங்களேயுமுடைத்தாயிருக்கை."ஏ னுடையநுண்ணனுவாய்த்தூலவுட்றகேதுவாங, காணரியபுற்க

லன்கள்காண்." "உழவாதியாறுங்கட்டோராறினையு, மொழிவ தனுன்முத்தியுறுமோர்" என்பதுமறிக. இது ஞானப்பிரகாசா விசேஷம். மறறொருவர், சரணமாதியோகமுதலானநூல்.எ-கு. அருகசரணமுதலிய நான்குசரணத்தையுங்கூட்டுவதான பூர்வா கமம், அங்காகமம, வெகுசுருதிமுதலியநூல்களை எ-ம். சரணம் —அருகசரணம், சித்தசரணம், ஆசாரியசரணமாகிய சாதுசரண ம், தன்மசரணம்என-ச. எ-ம், தன்மாதன்மி. எ-து. தன்மதன் மிஎனவிகாரமாய்நின்றது. தன்மாத்திகாயத்தை தனமமென்று ம், அதன்மாத்திகாயத்தை அதன்மியெனறுங்கூறியதுநாமவேக தேசநாமக்கிரணம்எனவுங்கூறினா.

---

நிற்றலோடுதலைபோதலன்மையை நிகழுதநுநீடு வெதிரேகமு, மூற்றதாமிவைகணததிலேமருவி யுள்ள வாபுரியுமாறுதான்,கற்றகாலமளவெய்திவாழுமுயிர் கா யமேவிநிறைவானதே, பெற்றுவேறுவருதன்மை நேரறி வுபெற்றதாகியுளபேசிலே. (கூ)

(இ-ள்.) நிற்றலோடுதலைபோதலன்மையை நிகழ்த்துநீடு வெதிரேகமுமூற்றதாம். எ-து. நிகழ்காலமு மிறந்தகாலமு மி வையல்லாமையைவிளக்காநின்ற நிலைபெற்றவெதிகாலமுமாகி ய மூன்றையுநிலைபெற்றுப்பொருந்தியதாம,—இவைகணத்திலே மருவியுள்ளவாபுரியுமாறுதான்கற்றகாலம். எ-து. அதுவன்றியு மூன்றுகாலத்தையுமொருகணப்பொழுதிலே பொருந்தியுண்டா னதகுதியைச்செய்யுந்தொழிலையு மந்தக்காலங்கற்றதாம்.—அள வெய்திவாழுமுயிர் காயமேவிநிறைவானதேபெற்று வேறுவருத ன்மைநேரறிவுபெற்றதாகியுளபேசிலே. எ-து. அக்காலத்தெல லையைப்பொருந்திவாழுமான்மாவானது சரீரியா யந்தச்சரீரமுழு துநிறைந்த தன்மையைப்பொருந்திப் பாலதருணவிருத்தவவத்

றைகளிலும் வேறுவேறாகவருந்தன்மையோடு, பொருந்ினவறி வுபெற்றதாகியுள்ளதாம், சொல்லுங்காலத்து. எ-று.

இசசெய்யுளாதிப்பொருள்பத்திற் காலத்தின்பகுதியையு முயிரின்பகுதியையுங்கூறிற்று. (கூ)

---

இப்பாட்டிற்கு நிற்றலோடுதலைபோதலன்னுவயநிகழதது நீடுவெதிரேகமும எனமுதலடியைத்திருத்தி,நிற்பனவு மோடுதலு மீளுதலு மன்னுவயமும் சொல்லாநின்றவெதிரேகமுமெனப் பொருந்தாநிற்குமிவை கணத்திலேகூடிப்பிரிகையுளதாகும், வழியாஙகல்வியுங் காலமு மளவையுங்கொணடு வழஙகுமான்மா வினறிவு கரும்பினிரதம்கரும்புள்ளளவும்நின்றாற்போலச சரீரத் தைப்பொருந்திசசரீரமட்டுநிறைந்துநிற்கும். வேறுதருதன்மையா கியவறிவொழியத் தரிசனக்கிரியாசைதனனியஙகளையுமுளவாம் சொல்லின். எ-று வெதிரேகபதாத்தவிளக்கம் என்பது கருத்து, எனககூறினர்ஞானப்பிரகாசா. மற்றொருவருமிதுவேபாடமோதி, நிற்றலோடுதலைபோதலன்னுவயம். எ-து. நிலைபெறுத லோடுகூடுவதாகியவன்னுவயமும்,—நிகழ்த்துநீடுவெதிரேகமும் எ-து. சொல்லப்படுநிலைபெற்ற வெதிரேகமுமாகியவிரண்டினையு ம்,— உற்றவாமிவை. எ-து. பொதுவிலக்கணமாகப்பொருந்திய னவாமிப்பத்துப்பொருள்களும். அவற்றுள் அன்னுவயம்,—கற் றகாலஙகணத்திலேமருவியுள்ளவாபிரியுமாறுதான். எ-து. படித்தறியப்பட்டகாலமானதுங்கணந்தொடங்கி அநந்தமீறாகப்பிரிவெட்வெகையாய்ப்பொருந்தி யுள்ளபடி வேறுபடுமுறைமையாம,—வாழுமுயிரளவெய்தி. எ-து. உலகத்துவாழுமுயிரானது ஆயுள்வரையறைவைப்பொருந்தி,—காயமேவி. எ-து. உடலினைப் பொருந்தி,—நிறைவானதேயெற்று. எ-து. கரும்பினிடமெங்கு மிரதங் கலந்திருந்தாற்போல உடம்பெங்குநிறைந்திருக்குந்தன்

மையைப்பொருந்தி,—வேறுவருதன்மை. எ - து. பாலதருண கௌமாரவிருத்தாவத்தையாக வேறுபட்டுவருந்தன்மையினையு ம்,—நேரறிவு. எ-து. ஓரறிவுமுதலொதறிவந்தமான நுண்ணியவ றிவினையும்,— பெற்றதாகி. எ-து. உடையதாகி,— உள. எ-து எக்காலமுமுள்ளதாகி,—வாழும். எ-து. பந்தத்திலுமுத்தியிலும் வாழும்,—பேசிலே. எ-து. சொல்லுமிடத்து. எ-று. தலைபோ தல் கூட்டுதல். அந்நுவயம் உள்ளது. வெதிரேகம் இல்லாதது எனவே பத்துப்பொருளுககும் அஸ்திநாஸ்திவாதமாயிற்று. அ ஸ்திநாஸ்திஎனினும் சத்தபங்கிஎனினுமொக்கும். க்ஷணமுத லநந்தமீறுகக்காலம் பதினெட்டாவன. க்ஷணமும் ஆவளியும் உயிர்ப்பும், தோகமும், இலவமும், நாழிகையும், முகூர்த்தமும். நாளும், பக்ஷமும், மாதமும், இருதுவும், அயனமும், ஆண்டும், யுகமும், பவவமும், அநந்தமும், எனவிவையாம் இவற்றினில ச்சணம் விரிவிற்கண்டுகொள்க. உளதென்பதிறுகெடநின்றது. என்றுகூறினர். இவற்றிலுள்ளபாடபேத வுரைபேதங்களையாரா ய்ந்தறிந்துகொள்க.

---

**பரந்துமீதுதருமாத்திகாயமழிவித்தசித்தமதுபண் ணிடு, நிரந்துகீழதருமாத்திகாயமது நித்தமாய்மிகநிறு த்திடும், புரந்தபுண்ணியமிதற்கு நன்மைபுகல்பாவமான வதுதீமையே, தரும்பொருட்கிடமதாகும்வானமிகு புற் கலன்களவைசாற்றுவாம். (எ)**

(இ-ள்.) பரந்துமீதுதருமாத்திகாயமழிவித்தசித்தமதுபண் ணிடும். எ-து. விரிந்துமேலாகத்தரப்பட்டதன்மாத்திகாயமான து பூதகாயத்தைமேலுமெடாதபடி யழிவித்த தனையசித்தியத்தை ச்செய்யும்,—நிரந்துகீழதருமாத்திகாயமது நித்தமாய்மிகநிறுத்திடு

ம். எ-து. நிரைப்பட்டுக்கீழாகத்தரப்பட்டவதன்மாத்திகாயமான தான்மாவோடுகூடி நித்தமாய் மிகவுநிலைபெறுவித்திடும்,—புரந் தபுண்ணியமிதற்குநன்மை. எ-து. தன்மமுதலாகச்செய்யப்பட் டபுண்ணியமானதுவே இந்தத்தன்மாத்திகாயத்தைத் தருவதற் குநன்மையாவது,—புகல்பாவமானவதுதீமையேதரும். எ - து. சொல்லப்பட்டமனவாக்குக்காயங்களாலுண்டான பாவமானது வே தீமைகளையேதருமதன்மாத்திகாயத்துக்கேதுவாம்,— பொரு ட்கிடமதாகும்வானம். எ-து. எல்லாப்பொருட்குமிடங்கொடுத் துநிற்குமாகாயம்,—மிகுபுற்கலன்களவைசாற்றுவாம். எ-து. இ தனிடத்திற்ரூன்றும்புற்கலப்பொருளை மேலேசொல்லுவாம். எ - று தன்மாத்திகாயமாவது புண்ணியத்தாலெடுக்குந்தேகம். அதனமாததியகாயமாவது பாவத்தாலெடுக்குந்தேகம்.

இச்செய்யுண்முன் னநாதியென்றுகூறியபத்தினுள்ளுந் த ன்மதன்மி யறம்பாவ மாகாசமென்னு மைவகைப் பதார்த்தங் களைக்கூறிற்று.　　　　　　(எ)

---

இதனுள் முதலிரண்டுசீரையும், மீதுதருமாத்திகாயம்பரந்து அதழிவித்து அநித்தம்பண்ணிடும், கீழதருமாத்திகாயமதுநிரந்து நி த்தமாய்மிகநிறுத்திடும. என அன்னுவயித்து, இதனுள், மீதுத ருமாத்திகாயம்பரந்து. எ-து. மேலாகிய தன்மாத்திகாயமானது லகெங்கும்வியாபித்து,—அதழிவித்து. எ-து. அதன்மாத்திகாய த்துக்குள்ள கீழ்ப்படநிற்குநிலையைக்கெடுத்து,— அநித்தம்பண்ணி டும். எ-து. தேகங்களுக்கநித்யத்தைப்பணணி யுயிர்களுக்கும் பு ற்கலத்துக்கும் மேலாகச்செல்லுங்கதியைப்பண்ணும்,—கீழ்தரு தருமாத்திகாயமதுநிரந்து நித்தமாய்மிகநிறுத்திடும். எ - து. கீ ழாகியவதன்மாத்திகாயமான துலகெங்கும்வியாபித்து நித்திய மாயுயிர்களுக்கும் புற்கலத்துக்குமிகவுங்கீழ்ப்பட நிற்குநிலையை

ப்பண்ணும். எ - ம். மிகுபுற்கலங்களவை. எ-கு. மிகுதியாகிய வணுபுற்கலமுங்கந்தபுற்கலமுமென்னு மவ்விரண்டினையும்.எ-ம் கீழ்ப்பட நிற்குநிலையைக்கெடுத்தெனவே மேலாகசசெல்லுங் கதியைப்பண்ணுமென்பது வருவிககப்பட்டது. புண்ணியம் விரவபுண்ணியமுந் திரவியபுண்ணியமுமென வருவிக்கப்படும். அவற்றுள் விரவபுண்ணியமாவது—கருணையுட, தெளிநதபுததியுடைமையும், ஆர்வமும், தியாநமும், விரதசீலஙகளை யநுஷ்டிததலும், ஓதல் கேட்டல் சிநதித்தல் தெளிதல் பிறாக்குபதேசித்தல் என்னுமைவகையாகிய ஞானப்பிரவிருத்தியும், தவம்பணணுதலுமாகி எழுவகைப்படும. திரவியபுணணியமாவது சாதவேதநீயமும், புருஷவேதநீயமும், சத்தியதததுவமும், உததமநாமஙகளும், தேவராகியுமநுஷ்ஷியராகியும் வாழுமூழும்எனவைநதுவகைப்படும். இனிபாவமும் விரவபாவமும், திரவியபாவமுமஎனவிரு, வகைப்படும். அவையிருவகைபுணணியஙகளுககுக் கூறியவறறிற்கெதிாமறையாம். எ-ம். கூறினரோருளாயாசிரியா.

---

ஏனுமொன் றுடையவாகியெங்குமனு வாயிருமபுகன்மரங்களும், பூனுமங்குருவெலாமுமாகுமிவைபுறகலப்பொருள்களென்னலாங், காணுமங்கறுவகைதொழிற்களவைகட்டுவிட்டநெறிகன்மமேன், மாணவின்றுவருமாறிமாறிமுன்வகைந்ததுண்டுவிடமாட்சியே. (அ)

(இ-ள்.) ஏனுமொன்றுடையவாகி யெங்குமனுவாயிரும்புகன் மரங்களும் பூனுமங்குருவெலாமுமாகு • மிவைபுற்கலப்பொருள்களென்னலாம். எ - து: ஓர்வலியுமுடையவா யெவ்விடத்திலு முருவமாய்த்திரண்டு இரும்புகன்மரங்கண் முதலிய வைமர யிவைவொழிற்தெடுத்துக்கொள்ளப்பட்ட் வுருக்களெல்

லாமுமாய் திரியக்கணுபூர்வமென்னு மான்மப்பெயளாயுமுடை யவாய் நிற்குமவையிற்றைப் புற்கலப்பொருளென்று சொல்ல லாம்,—காணுமங்கறுவகைத்தொழிறகளவைகட்டு. எ-து.பொல் லாங்காகிக் காணப்பட்டுள்ள வறுவகைததொழிற்களே பந்த ம்,—விட்டநெறிகன்மம. எ-து. அந்தப்பந்ததைவிட்ட வொ ழுங்கேதவம்,—மேனமாணகின்றுவரும். எ-து. அத்தவந்தா னு டலமென்மேல்வருந் தவமாட்சிமையுணடாய் நிலைபெற்றுவாத திக்கும்,— மாறிமாறிமுன் வகைந்ததுணடு விட மாடசியே. எ-து. ஆன்மாவுக்குமுன்பே புசிப்பதாக வுணடாகபபட்டபுண ணியபாவங்கடொலையப்புசித்து விட்டமாட்சிமையே வீட்டை த்தரும். எ-று. அணுபூர்வமான தெய்வகதியாவைபூாவம், மனுஷ ஷியகதியாவைபூாவம், நரககதியாவைபூாவம், பக்ஷிமிருககதியா வைபூர்வம, திரியககாதியாவைபூாவம, எனவிவை. இந்நால்வ கையுள் திரியக்காதியாவைபூாவம் புற்கலப்பொருள். அறுவகை த்தொழிலாவன—கந்த ரச ரூப பரிச சத்த பரிணமம்எனவிவை காமாதியறுவகையுமாம்.

இச்செய்யுண்முறையானே முன்னர்ப்பத்தினுள் புறகலப் பொருளும் பந்தமும் வீடுமாகியபொருள்கண் மூனறையுங்கூ றிற்று. எனு - வலி.

வாசமாமலர் என்னுஞ்செய்யுண்முத லிச்செய்யுட்காறு நி கண்டவாதிமதங்கூறிற்று. (அ)

---

இதற்கு ஜயினாகமத்துப்பிரமாணமாவ தவருடையநீலகேசி யிற்சொன்னபடி, "காண்டலுமல்லதெம்மளவைகாண்டன்முன், பூண்டவைம்பொறிமனமவதிபுண்ணிய, மாண்டகுமளப்பரியங் கேவல, காண்டகுமிவையாருள்ளூநாணணினுய். எ-து.காண்டல், பிரத்தியக்ஷமல்லது பரோக்ஷம், இவையிரண்டுமேபொருள்களே

யளக்குமளவை. அவற்றுட்பிரத்தியக்ஷம்— இந்திரியப்பிரத்திய க்ஷம், மாநதப்பிரத்தியக்ஷம், அவதிப்பிரத்தியக்ஷம், மனப்பரியா யப்பிரத்தியக்ஷம்,கேவலப்பிரத்தியக்ஷம் எனவாம். இவையிற்றி லிந்திரியப்பிரத்தியக்ஷமாவது—கண்முதலாகிய விந்திரியங்களா ல் நீலமுதலியபுறப்பொருள் பற்றப்பிறக்குஞ்ஞானம். மானதப் பிரத்தியக்ஷமாவது—சுகாதிசொரூபவிஷயமாகவும் சாரணஞான ங்களுடைய சொரூபவிஷயமாகவும் பிறக்குஞ்ஞானம். மனப்பரி யாயப்பிரத்தியக்ஷமாவது, கேவலப்பிரத்தியக்ஷமாவது-ஞானாவ ரணீயம், தரிசனாவரணீயம், மோகநீயம், அந்தராயம் என்னுமநா திகன்மங்களொழிவறக்கெட்டவழிபிறப்பதாகி ஜீவாதிசகலபதா ர்த்தங்களையு நிணிசழ்சசிகளையும் க்ஷணத்திலே சாக்ஷாத்கரிக்கி ன்ற வருகபரமேஸ்வரனது திவ்வியஞானம் கன்மங்களது நீக்கத் துசக ஞன்மாவின்கட்பிறக்கும் விசுத்தி. பரோக்ஷப்பிரமாணம் அவனிலகேசியிற்சொன்னபடி "நினைவுமீண்ணுணர்வூகநேர்தருக கம், புனைவுட்சோனுமைபொய்யன்மைமெய்யுரை, மூனைவர்தம் மாகமம்மொழியுமாகுமென், றினையனகாட்சியிலளவையைந்து மோ." நினைவு ஸ்மரணம். மீண்ணுணர்வு பிரத்தியபிஞானம். ஊக ம் தர்க்கம். புனைவுட்சோனுமைஎனப்படுவது அநுமானம். பொ ய்யினீங்கியமெய்யாகிய ஆப்தவாக்கியம்,ஆகமமென பரோக்ஷப் பிரமாணமைந்து.எ-ம். "அபரோக்ஷம்பரோக்ஷமென வீரண்டா கும்பேசுவன" இவைவிரிக்கிற்பெருகும். பார்க்கவேண்டின் நீல கேசியிற்காண்க. என்றார் ஞானப்பிரகாசர். அன்றியும் பூணுமவ் குருவெலாமுமாம். எ-கு. பொன் வெள்ளி செம்புமுதலான வுரு க்களுமாய். எ-ம். அறுவகைத்தொழில். எ-கு. உழவு தொழில் வ ணைவு வாணிகம் வித்தை சிற்பமாகியவறுவகைத்தொழில். எ-ம். கூறினர். மற்றோருரையாசிரியர் இச்செய்யுளுக்கு—ஒன்றேனு முடையதாகியெங்கு மனுவுமாகும். எ-து. முற்கூறிய வணுபு

ற்கலங் கந்தபுற்கலமென்னு மிரண்டுபுற்கலங்களுள் அணுபுற்க லமாணதுவலியும், உம்மையால் நெகிழ்ந்தபரிசமுதலிய வுடைய தாகி மூன்றுலகத்தினு நிறைவாயணுரூபமாயிருக்கும்,—அங்கு ப்பூணுமிரும்புகன்மரங்களு முருவெலாமுமாகும். எ-து.ஒழிந்தக ந்தபுற்கலமாவது அவ்விடத்துப் பரமாணுக்களாற்பரிணமிக்குமி ரும்பும்கல்லும்மரங்களுமற்றை வடிவில்பேதங்களியாவுமாயிருக் கும்,—இவை புற்கலப்பொருள்களெனலாம். எ-து. இந்தவிர ணடிலையும் புற்கலப்பொருள்களென்று சொல்லுதலாம், அங் குக்காணுமறுவகைத்தொழில்கள்கட்டு. எ-து. இனிபந்தமாவது சம்சாரமாகிய அவ்விடத்துநிகழும் உழவுந் தொழிலும் வரைவும் வாணிகமும் வித்தையுஞ் சிற்பமுமாகிய வறுவகைத்தொழிலக ளாற்கட்டுப்படுவதாம,—அவைவிட்டநெறி. எ-து. அந்தப்பந்தங் களைவிட்டதே மோக்ஷமாவது,—மாணநின்று.எ-து.மாட்சிமை ப்படத்தவமுதலிய வொழுக்கங்களினின்று,—முன்கன்மமேன் மாறிமாறிவரும். எ-து. முற்செய்தகன்மம் பின்புசெய்தமுறை மையில்வாராது புசித்தற்குப்பக்குவமானபடி மாறிமாறிவரும்,— வகைந்ததுண்டுவிடுமாட்சியே. எ-து. அவ்வாறு கூறுபட்டுவந் தகன்மத்தைச் சமைந்தசோறுண்டு விடுவதுபோல புசித்துவிடு மாட்சிமையுடையதாம். எ-று. நெகிழ்ந்தபரிசமுதலியனவாவ ன - நெகிழ்ந்தபரிசமும், சீதபரிசமும், ஒருவாசனையும், ஒருநிற மும், ஒருசுவையுமாம். கட்டுப்படுதலாவது ஆன்மாவினிடத்து திறகன்மங்கள்சென்று சொரூபந்தெரியாமல் மறைக்கப்படுவதா ம். மாட்சியுடையதைமாட்சியென்ற துபசாரவழக்கு எனவிள ங்கவோதியதின் பாடபேதவுரைபேதங்கள் கண்டுகொள்க.

---

நிகண்டவாதிமத முற்றிற்று.

பாயிரமுட்பட்டசெய்யுள்—௧௩௩.

## நிகண்டவாதிமதமறுதலை.

அருகனுக்கனந்தஞானமாதியாதியாகவே
பெருகநிற்றல்சீதமாமதிக்கடைந்தபெற்றியே
லொருவுமிட்டவொப்பவனுயிர்ததிறத்தினுள்ளபின்
மருவுமிக்ககுற்றமேலறததின் மன்னினுனெனில். (க)

(இ-ள்.) (அருகனுக்குபின்வரும் அறத்தின்என்னும் இரண்டு செய்யுளுமொருதொடர்.) அருகனுக்கனந்த ஞானமாதியாதியாக வே பெருகநிற்றல சீதமாமதிக்கடைந்தபெறறியேல். எ-து. அருகபாமனுக்கு ஞானுவரணியமாதியாகிய தீககுணஙகளெட்டு நீயகப்பட்டு, அனந்தஞானமாதியாகிய நற்குணஙகளெட்டுஞ் சநதிரனுக்குச்சைத்தியம்போல வுண்டாமென்று கூறினுய் அதுவே முறைபாடாயின்,—ஒருவுமிட்டஒப்பு. எ-து. நீகூறியவுவமையினீங்கப்படும். அஃதெங்ஙனமென்னில்,--அவனுயிாததிறததினுள்ளபின் மருவுமிக்ககுற்றம்.எ-து. கத்திருகுணமின்றியே சிலகுணத்தைவிட்டுச்சிலகுணம்வநதுகூடிற்றென்ப தானமகுணமாகையா லவனுமானமகுணத்தை யுடையவனுவன். ஆகவேவிடப்பட்ட தீக்குணங்களெட்டு முன்புண்டாய்விட்டதாம்;— மேலறததின்மனனினுனெனில். எ-து. அறறன்று, அவன்ஞானுவரணியமாதியாகியகுணங்களைநீங்கி யநநதஞானமாதியாகிய குணஙகளை கூடிதன்மேலானவறத்தின்கண்ணேபொருந்துகையினுல். எ-று

அருகனெண்குணங்கள்பொருந்துதல்சையோகசம்பந்தமாதலானும், சந்திரன் குளிர்ச்சியைப்பொருந்துதல் சமவாயசம்பந்தமாதலானும் நீகூறியவுவமைபொருந்தாதுஎன்று வருவித்துரைத்தா ரோருரையாசிரியர்.

அறததின்மன் னுவித்தவனஞெருத்தனுயவன்னறத
திறத்தினிற்றன்மற்ருெருத்தனுல்விளைந்தசெய்தியா
மறததினறறவாக்கெலாமவணக்கமுன்னிறைக்குமேற்
பிறக்குமிங்கவத்தைகொண்டதாளாயிங்குபேசிடே. (உ)

(இ-ள்.) அறததின்மன்னுவித்தவன் ஞெருத்தனுயவன்ன றத்திறத்தினிற்றன்மறருெருததனுல் விளைநதசெய்தியாம். எ-து. ஆஙகவ னந்ததருமத்தினுலே பொருந்தினுயி னந்தத்தன்மத்திலே நிலைபெறுவிததவ ஞெருவனுளனு யவனுற்கூறப்பட்டதன் மநெறியிலே நிற்குநதகுதி யொருவன்கறபிதததொழிலை யொருவன்செய்த செய்தியாம்,—மறத்தினற்றவாக் கெலாம்வணக்கமுன்னிறைசகுமேற பிறககு மிங்கவத்தை. எ-து. கொலையை நீங்கினவாக்கு வணககமாகப்பட்ட வுன்காத்தாவுக்கு மேலுமொருவனுளனென்பதோ ரொல்லையுணடாமாகையால்,— கொண்டதாளாயிங்குபேசிடே. எ - து. முனனாக்கூறியவனையோ, அவன்கீழ்நின்றிந்திரியத்தொடககுப்படாமற் றவஞ்செய்தவனையோ, நீகாத்தாவாகக்கொணடது யாவனையென்று சொல்வாயாக. எ-று. மறத்தினறறவர் கொலைத்தொழிலைச்கைவிட்டவர்.

இச்செய்யுள்களருகன் சிலகுணஙகளைநீங்கிச் சிலகுணங்களை வந்து கூடுகையானு மப்படியுண்டாவதறத்தினுலெனின், அவ்வறனுமொருவனுண்டாக்கினு ருகவேண்டுமாகையாலுங் கர்த்தாவல்லவென்று மறுத்துக்கூறிற்று. (ஞானம்.) நீதலைவனுகச் சொல்லப்பட்டவன் கன்மக்ஷயம்பிறந்தவனே, கன்மக்ஷயம் பிறவாதவனே, பிறந்தவனுகிற் றபோபலத்தாற்பெற்றவனும், கன்மக்ஷயம்பிறவாதவனுகில் உலகத்துள்ளார்க் கொப்பாவன், அநாதியேமுத்தனுகிற் சீவவர்க் கத்தனல்லனு மெனக்கொள்க.

முடிவின்கணுனக்கின்னுன் கத்தனென்பது சூடாமணி சொல்லுமதனுக் கநவத்தையென்னுங்குற்றமுண்டாம் ஆதலால் நீசொல்லுமதாகாதுஎன்க, "உயிர்த்திறத்தினுள்ளா னுணர்ச்சியுமாதி, யுயிர்த்திறத்துள் ஞானம்போலும்." என்பதுஙகாண்க என்ருா ஞானப்பிரகாசா. மற்ருேருனாயாசிரியா, மறத்தினற்ற வாக்கெலாம் எ-னே. மறததிமற்றவாககெலாம் எனப்பாடமோதி, மறத்தி. எ-து. இத்தனமையையமறந்தாய்போலும்,—வணக்கம். எ-து. உன்நூலிற்கூறியவணககம் யாாக்கென்னில்,—மற்றவர்க்கெலாமுமுன்னிறைக்கேல். எ-து. நூல்சொன்னவிகலாத்தர்முதலிய வுலகத்தாாயாவாககும முன்னேயுள்ளவிறைவனுக்காயில், முன்னுள்ளவிறைவனுனவன் இகலாத்தாக்குபதேசித்த சகலாத்தனுதலா லவன்வுணங்கியவணககம் நால்வகைவணக்கத்துள் சாதுசரணமாகவேண்டும. வேணடவே அருகசரணங்கூறுதற்கு,—இங்குபிறசகுமவத்தை கொண்டதாளையின்றுபேசிடே. எ-து. இவ்விடத்துணடானவருகாவத்தை யாளைப்பொருந்தினதுஇதுபொழுது சொல்வாயாக. எ-று. எனவேசகலாத்தனுகிய வருகனுககு மேலாயொருகடவுளுண்டென்பதாயிற்று. இறைக்கும் என்றஉம்மையைப்பிரித்து மற்றவர்க்செலாம் என பதனேடுகூட்டுக. என்ருா.

---

**கருவிகண்டுடக்கொழிந்துகண்டுவாழுமென்றியே**
**லுருவுகொண்டுநின்றதென்னிலுண்டுதான்மநாதிக [ன்**
**னொருவிநின்றதென்னிலத்தமொன்றையுமுணர்ந்திடா**
**பொருடெரிந்துபோகைகாலமொன்றிலேபுணர்ந்திடான்**

(இ-ள்.) கருவிகண்டுடக்கொழிந்து கண்டுவாழுமென்றியேல், எ-து. உன்கர்த்தாவாகியவருகபரமன் மனுதிகளாகிய கருவி

கனின்றறியுமறிவைநீங்கிச் சாவமுங் கண்டிருக்குமென்றுகூறி னாய். அப்படியாயின்,—உருவுகொண்டுநின்றதென்னிலுண்டுதா னமாதிகள். எ-து. அவனைசசரீரம் பொருந்திநின்றதென்றுகூ றின் மனமுதலாகியகருவிகளுண்டா மவையொழிந்துகாண்ட ற்குவழியுமில்லை,—ஒருவிநின்றதென்னி லத்தமொன்றையு மு ணாநதிடான். எ-து. அவனைச்சரீரநீங்கிநின்றதென்றுகூறி னவ னெலலாவற்றையுங்கண்டு வாழுமென்றுசொல்லுதலு மித்தியா வாதமுமாய் மற்றொனறையு முணாந்ததில்லையாவன,— பொரு டெரிந்துபோகை காலமொன்றிலே புணர்ந்திடான். எ-து. ஒரு பொருளையறிதற்குக கருவியானமூனறுகாலத்தையு மொருகால ததிலே யுணருநதனமையனல்லன். எ-று.

இசசெய்யுள அருகபாமன் கருவித் தொடக்கையொழிந்து சாவமுங்காண்பனென்பதனையு மூன்றுகாலத்தையு மொருகா லத்திலே நின்றுணாவனெனபதனையு மறுத்துககூறிற்று. (௬)

**ஆர்வகோபமானவை யடைந்தொறுப்பவர்க்கெலா ஞ்,சோவதின்மைசெப்பிலின்றுசீவன்மேவுகாயமா,லோ ருமன்னர்போலவேயுயிர்க்களித்தலென்றியே,லேர்கொ ளபொனனெயிலிடத்திருத்தல்பெற்றதென்கொலோ(௭)**

(இ-ள்) ஆர்வகோபமானவையடைந்தொறுப்பவர்க்கெலா ஞ் சோவதின்மைசெப்பிலின்று சீவன்மேவுகாயமால். எ-து. காமக்குரோதமுதலியவற்றோடுங்கூடி யதனைத்தீதென்றறிந்து நீக்கப்படுவோர்க்கெல்லா மின்றுமுத்தியடைதலில்லையாம், உன் னருகபாமனுஞ் சீவனோடுகூடின காயமாகையால். அற்றன் று,—ஒருமன்னர்போலவே யுயிர்க்களித்தலென்றியேல். எ-து. க்ஷத்திரியதன்மமான சாத்திரத்தை யாராய்ந்தவரசனைப்போ ல வுயிர்க்குத்தலையளிசெய்தலே யருகபாமனுக்கு முறைமை

யென்று கூறுவையாயி னவ்வரசனைப்போல துஷ்டநிக்கிரக முஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்யவேண்டும்,— ஏர்கொள் பொன்னெயிலிடத் திருத்தல்பெற்ற தெனகொலோ. எ-து. அ வ்வரசனைப்போல வொருநிலத்திலிருந்து துஷ்டநிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ்செய்யாது பொன்னெயில்வட்டத்திருக்க ப்பெறறதியாது. அதுவுமின்றி "மருவிநின்று வழிபட்டவர்க்கு மலைவுறறவர்க்கு மனமொத்திடுங்குரிசில்" என்று நீமுன்னாக் கூறுகையானு மரச நிவ்வுலகத்திருத்தலானு முன்னருகபாமண ரசனையொகருந் தன்மையுமுடைய னல்லன். எ-று.

இசசெய்யுளருகபாமன் சரீரியாகையா லவனைநோக்கித்த வஞ்செய்வா முததியடைதலில்என்றும், அரசனைப்போல வெ ன்னின் மனமொததிடுஙகுரிசிலென்பது வழுவாமென்றும்மறு த்துககூறிற்று.

அருகனென்னுஞ்செய்யுண்முத லிச்செய்யுட்காறு மருகபர மனைக காத்தாவலலவென்று மறுத்துககூறிற்று. (௪)

---

சிவனமேவுகாயமால். எ - னை. சிவனேகுகாயம்எனப்பா டமோதி வழிபட்டவாகளைச் சந்தோஷித்தநுக்கிரகம்பண்ணுத லு மொறுத்தாரைவெறுத் தநுக்கிரகம்பண்ணுதலு மிவ்விரண்டு தன்மையும் பொருந்துதலில்லாமை சொல்லின் உனதுகர்ததா பிணததை யொப்பவனுவன். என்றூா ஞானப்பிரகாசரு மற்றோ ருரையாசிரியரும்.

---

**சொல்லதொன்றுகொண்டிகலிஞத்தனுடவேசொலி**
**னில்லையாமநாதிதானியம்புமாறதெங்ஙனே**
**நல்லவாமநாதிதானவர்க்குநாடவேயிலை**
**யொல்லையூமருமருக்குணாத்தவாறதொக்குமே. (௫)**

(இ-ள்.) சொலலதொன்றுகொணடிகலினுத்தனுடவேசொ லின். எ-து. உன அநாதியருகபாமனுகிய சகலாத்தன் ஒருசொல லைகொண டாதியருகபாமனுகிய விகலாத்தன்கேட்க மாறுபா டில்லாதபொருளைச சொன்னுனென்றுகூறின்,—இல்லையாமநா திதாணியம்புமாறதெஙஙனே. எ-து உன்னுகியருகபாமனுககு மநாதிகளில்லையெனறு நீகூறுகையா லநாதியிலருகபாமனுட னொருசொல்கேட்டுப் பலவிதமாக நூலசொன்னபடியெப்படி. அஃதன்றியும்,—நலலவாமநாதிதானவாகருநாடவேயிலை. எ-து. உன்னுகியருகபாமனுககு நனமுகியமநமுதலாகிய கருவியுமறி தறகிலலையாகையால அவன்கேட்டபடியெப்படி,—ஒல்லையூம ரூமருக்குரைத்தவாறதொசகுமே. எ-து. அநாதியருகபாமனொரு சொலசொல்ல வநதவனையாகியருகபாமனகேட்டுப் பலவிதமாக நூல்செய்தானென்று நீசொல்லுமது, ஊமைசொல்ல வூமைகே ட்டுநூல்செய்தானென்னுந்தன்மைகொசகும. எ-று. ஒல்லை வி ரைவு, ஒருமாத்திரை. சொல்லதொன்றென்பது பஞசாததிமயம்.

இன்பபூமிசேரிகலினுத்தனிவ்விருநிலத்
துன்பமஙகுணாந்திடாமையிஙகுவநதசொல்விடா
னின்பபூமியிலிருந்திருந்தியாவுமெயதிடிற்
றுன்பபூமியாமுணர்நதுசொல்லவல்லதில்லையே. (கூ

(இ-ள்.) இன்பபூமிசேரிகலினுத்தனிவவிருநிலத் துன்பம ங்குணர்ந்திடாமையிங்குவந்தசொல்லிடான். எ-து. புண்ணியபூ மியாகிய பொன்னெயில்வட்டத்திருககிற மாறுபாடில்லாதவ நாதியருகபாம னிந்தப்பெரியபூமியிடத்துண்டாகிய துனபஙக ளையறியானுகையாலு மநாதிகளில்லையாதலானு மிந்தப்பூமியிலு ணடானவற்றை யிப்படிச்சொல்லென்றுசொல்லமாட்டான்,— இன்பபூமியிலிருந்திருந்தியாவுமெய்திடில். எ-து. புண்ணியபூமிப்

பொன்னெயில்வட்டத்திருந் தநாதியருகபரமன் பூமியிற்றுன்ப
மியாவையுமறிந்து சாத்திரஞ்செய்யச்சொன்னனென்றுசொல்
லின்,—துன்பபூமியாமுணர்ந்துசொல்லவல்லதில்லையே. எ-து.
புண்ணியபூமியாகியபொன்னெயில்வட்டமுணர்ந்துன்பபூமியாவை
யா னீதலைமயங்கச்சொல்லுஞ்சொல்லுக்குயாமறிந்து சொல்லு
ஞ்சொல்லில்லையாம். எ-று. சொல்லவல்லதில்லை. எ-து. அரு
கன்றலைமயங்கிக்கூறுகையாலவனையிகழ்ந்துகூறியது. இருந்தி
ருந்தென்றது வினாவுச்சொல் சகலாத்தாரந்தப்பூமியராதலால
றிந்ததெங்ஙனமென்றுயிற்று.

இச்செய்யுளிரண்டி னிகண்டவாதிசாத்திரத்தைமறுத்துக்கூ
றிற்று. (சு)

---

இதனுற் சாவஞ்ஞத்துவங்கூடாது. நீமூன்றுமூடமெனறு
சொன்னுய், அதிறதேவமூடமென்றது சாவஞ்ஞரலலாதாரை
யாத்தரென்கையென்றுய், உன்சர்வஞ்ஞா ஞானசொரூபியாயு
லோகாகாசத்திருப்பரென்றுய் அவருடையஞான மேகதேசமா
கையாற் சாவமுமறியமாட்டார். அறியின், ஏகதேசங்கூடா
தாதலா லததேவமூடமு மாயித்தனகக்கொள்க. உலோ
கமூடமாவ தாறுகடன்முதலான தீர்த்தமாடுதலென்றுய், உனச
மயத்து யக்ஷியானவள் பிராமணஸ்ரீ யவளைத் தனித்தழைத
துப்பொய்கையிலாடச்சொல்ல வவள்யக்ஷிரூபமாய்நிற்க வவளை
யுன்னுலயததிலே வைத்தாய, ஆதலாலுலோகமூடமில்லை. ஸ்ரீக
ளானவாகளாரியாங்கனைகளிடத்தே தன்மோபதேசங்கேட்டா
ரியாங்கனைக ளாச்சிரமங்களிலே யிருக்கவென்றுய, இந்தயக்ஷி
யானவள் ஐயினனிடத்தேகேட் டுனபாழியிலிருக்கை யொத
தாமமாம். பாஷண்டமூடமாவது சடைகட்டல் சீவரம்போா
த்தன் மயிாக்கயிறெனப் பணிதன்முதலாயின வென்றுய், பீலி

மூதலானவை பிடித்தாற் பாஷண்டமூடமூனக்கே. கொலையா ல்வருந்தோஷமுங காரணுத்பாவத்தானவரு மட்டசமயங்களு ம்ஆகாதெனறுய. நீபௌத்தாமுதலாயினுரை வெல்லுதற்குச்சா ததிரமுமிட்டு விருதும் பேருநதரிக்கவாசைப்படுதலா லதுதன் மதியாம். அங்கஙகளாகசசொன்னவிடத்துங காங்கிசையற்றிரு ககவேணுமென்றுய். சரிதைப்புறமும் திரவியவேசங்களாலு மி க்குப்பாழிப்படுப்பன். அடுப்பனவறமுலுமற்றுள்ளதோஷஙகளா லு மிக்கிருந்ததலா லஙகஹீனனுமானுய். பொய்யாமையானது பறஙகூறன், மயககுரைத்தல், குறளேசசொறசொலலுதன்முதலா னவை. நாடுகெடவுங குடிகெடவு மூரகெடவுந்தான்கேட்கவும் வந்தாலுஞ் சொல்லுவானல்லவென்றுய். புறஙகூறல்புத்தரைநி ந்தித்தலாவது முனககேயாம். மதுரையிற்சம்பந்தப் பெருமாணு யஞா மடததுநெருப்பிட்டும், திருநாவுககரசுநாயனு ராசாரியரா யிருககச் சற்றும்பாவத்துககஞ்சாம லஙகத்தை நீற்றறையில டைததும், விஷபானம்பண்ணுவித்தும், மதயானையைமுன்னே விட்டும், கல்லிற்கட்டிக கடலிலிட்டும், இராஜாவுடனே பொய் கனேச்சொல்லி இப்படியெல்லாம் விவேகமில்லாமற் பண்ணுத மாாககமெல்லாம் பணணுவிததிரகள், இப்படிசசெய்வித்ததெல் லாம் சமயநிலைநிறுத்தற பொருட்டாமாகில் வஞ்சனேசெய்ததா ம் அஃதாகாதென்க. எருதுகுதிரைமுதலாயினவைவிற்கை கொ ளளுமிடஙகாட்டல உழவுமுதலாயின தொழில்செய்யும துணை ததலாகாதெனறுய். உன்சமயததாரானவாக ணரகத்தராகை நிச சயமே. அசுபச்சுருதியாகாது. அது ஸ்ககையும் புத்தாகதைமுத லானவை கேட்கலாகாதென்றுய். உன்சமயதது மகாபுராண ம் சிந்தாமணி. இவைகேட்டவர்க ணரகமடைகை நிச்சயமாகு ம். அன்றியுமுன்னுப்த னிர்விகாரியாகிற் சாத்திரமெங்ஙனமோ தினன். மூரசைககடிப்பிட்டுத்தாககச் சத்தஙகிளம்பினுற்போல

ச சகலாத்தரிடத்தி லிகலாத்தர்சென்று "தன்மம்பகவ" என்ற போது "பஞ்சாஸ்திமயம்" என்னும் சத்தங்கிளம்ப அதனைவிரி த்து தசபதார்த்தமாகச் சொன்னுரென்னில் முரசுதாக்கின தாள மொழிய வேறொருதாளமுழங்காது இவனும்"தன்மம பகவ" எ ன்றபோது தானும் "தன்மம்பகவ" என்னுமதொழிய "பஞ்சாஸ் திமயம்" என்றது பிரதிவசநமும் திருஷ்டாந்தமுமிட்டா யது வுஞ்சொன்ன தொழியச்சொல்லாது. இவைதிருஷ்டாந்தஹா னியாம் "முரசெவைதிருமூனைவான்மொழியே" இகலாத்தாசக லாத்தரினு ஞானவானுகவேணடிம, அவா "பஞ்சாத்திமயம்" எ ன இவர்நவபதாாத்தம் எனபது தசபதாாததம் என்பது சாவப தாாத்தம் என்பது வகையறியாமற சாவபதாாத்தமு நிததியாநித் தியமென்ப தொன்றுநிசசயம் பிறபபிககமாட்டாமற் பித்தாசொ லபோலப் பலபிதற்ருநின்ருன். நித்தாநிததமொருவஸ்துவிற்கூ டினபடி யெங்ஙனென்னில் திரவியத்தால்நிததம் பரியாயத்தா லநித்தம்என்ருன். அதுபேசினமணனுை துநித்தம் கடமானத நிததமென்னில்,ஒன்றிலநேகாந்தஞசொல்லின் மண்ணினுக்கே நித்தியமு மநித்தியமுஞ்சொல்லவேணடும். அன்றியும் பரியாய மாய்ககடாதிகளுக்கு மநிததியமுநிததியமுமாகச சொல்லவேண டும், அதனுனித்தியாநிததியங கூடாதென்பதுகருத்து. அன்றியு ம்பின்னுபின்ன மெங்ஙனமென்னிற் புருஷாமிருகமு நாரசிங ்கமுங கட்சரபமுந் தணமாவெனவுஞ் சொன்னுய். அவையொரு வயவத்தி லொருவவயவமில்லே. அதனு லேகாந்தமொழிய அநேகாந்தஞ் சம்பவியாது. ஒன்றுக்கொருகுணஞசொல்லி னியு மேகாந்தவாதியாம். அநேகாநதவாதஞ்சொலலில் தன்மாத்திகா யந்தானே கமனங்கட்குந்திதிக்கு மேதுவென்னவேண்டும். அ ன்றியும் "கல்வியானல்லன் காமத்தாற்றீயன்" என்றல் அவனு அனை. அநுவிருத்தம் வியாவிருத்தம் சுபாவம்சொல்லவேணடு

ம். நீயநேகாந்தஞ்சொல்லப்புகுந் தேகாந்தமாயொன்றாக கொ ருகுணம் சொன்னாய்என்றார் ஞானப்பிரகாசா. மற்றொருவா உணாநது சொலலவல்லதில்லையே. எ-து. எலலாப்பொருளையும ரிநது நூலசொலலததக்க வறிவுஇகலாததனாக இல்லையாம். எ ன்றார்.

---

நிறைநதுகாயமோடுசீவனின்றதாகிலிவ்வுடல்
குறைநதபோதுதானுமித்தொடொக்கவேகுறைநதிடு
மிறநதுபோகுமிககடமிறநதபோதுநீாகுடத
துறைநதுடைநதிடககுடமுலநதவாறதொககுமே. (௬)

(இ-ள.) நிறைநதுகாயமோடு சீவனின்றதாகிலியவுடல் கு றைநதபோது தானுமித்தொடொககவேகுறைநதிடும். எ-து இ நதசசரீரததோடு ஆன்மாவானதுநிறைநது நிறகுமென்றுகூறி னாய, அஙஙனநிறைந்துநினறதாகி லான்மாநினறகாயங்குறைநத போ தான்மாவுஙகுறைந தறிவுகுறையவேண்டும். அஃதன்றியு ம,—இறநதுபோகுமிககடம். எ-து. இந்தச்சரீரமானதுகெட்டு படோம்,—இறநதபோது. எ-து. இந்தசசரீரஙகெட்டபோது,— நீர்குடத்துறைந்துடைநதிடககுடமுலநதவாறதொககுமே. எ-து. குடத்தின்கணிறைந்துநின்றநீா குடமுடைய வங்நீருஙகெட்டா றபோல வான்மாவுஙகூடகெடவேண்டுமாகையா லான்மா சரீரமுழுது நிறைநதுநிற்குமென்றுசொலவாயல்லை. எ-று.

இச்செய்யுளானமா சரீரமுழுதுநிறைநதுநிற்குமென்பதனை மறுத்துக்கூறிற்று (எ)

---

கரும்பினிரதமபோற் சரீரம்வியாததியென்றாய, கருமபி னிரதமுங கரும்புள்ளமட்டுமுண்டானாற்போல வான்மாவுஞ்ச ரீரத்துள்ளொழிய பாஹீயஞானமில்லா திருத்தல்வேணடும" ஜீ

வசங்கோச விகாசதன்மப்பிரதீபவதி'' ஜீவன்சங்கோசவிகாசகு ணமத்தையுடையவனாய் விளக்குப்போலிருக்கும் என்றுநீசொ ல்லுதலால் பரிணாமமசேதநத்திற்கேயுள்ளது, சேதநததுககில் லை. என்னே, "பரிணாமோசிதம்பொரோத்தா சிததுரூபநயுசசி யதே'' பரிணாமயோசகியமுணடென்கிறது சித்துக்குக் கூடா தென்று சிவாகமஞ்சொல்லுதலாலே சேதநத்துக்குப் பரிணா மில்லையாகும். அன்றியுமாதித்தனை மேகமறைததாற்போல வா ன்மஞானத்தை ஞானாவரணமறைத்ததென்னில், ஆதித்தனைம றைத்தமேகத்தாற் கீழுள்ளவாகளுககுத் தெரியாது தன்னளவி றபிரகாசமுடைய ததுபோல ஞானந்தன்னளவிறபிரகாசமுண டாகவேண்டும். ஆதலாலுனக கான்மசொரூபந்தெரியாதென்க "நிறையினுயிருடலி னோர்ந்தபலமைந்து, மறியுமொருகாலநதெ ன்றாய்." என்பதுமறிகஎன்றா ஞானப்பிரகாசா.

---

கண்டநூறருந்தன்மாத்திகாயமோடதனமமு
முண்டுமீதுகீழுலாவியுற்றுநின்றிடப்பொருள்
கொண்டதெனனிலத்தமிவ்விரண்டுதனமைகூடிடா
வண்டுபுட்கள்போலெனில்வழங்கிடாகணததிலே. (அ)

(இ-ள்.) கணடநூறருந்தன்மாத்தி காயமோடதன்மமு மு ண்டுமீதுகீழுலாவியுற்றுநினறிடப்பொருள் கொண்டதென்னில எ-து. ஆன்மாவானது தான்செய்தபுண்ணியததாலே தன்மாத் திகாயத்தையெடுததுககொணடு மேலாகப்பொருந்திநன்மையை ப்புசித்த ததிலேபரந்திடுமென்றும், தான்செய்தபாவத்தாலே அ தன்மாத்திகாயத்தையெடுததுககொண்டு கீழாகப்பொருந்தித்தி மையைப்புசித் ததிலேபரந்திடுமென்று மிப்படியிரணடுகாயத ைதயொருகாலத்திலே மாறிமாறிக்கைக்கொண்ட தென்றருகபா

மனருளிய நூல்சொல்லிற்றென்னில்,— அத்தமிவ்விரண்டுதன் மைகூ ட-டா.எ-து. ஆன்மாவொருகாலத்திலேயின் றிரண்டுருவெ டுத்துக்கொள்ளமாட்டாது;—வண்டுபுட்கள்போலெனில். எ-து மயிர்சகுட்டிப்புழுவண்டாறுைபோலவு மற்றுள்ளபுழுவேட்டு வாளியாறுைபோலவும வேறுபடக்காயமெடுத்துக்கொள்ளுமெ ன்றுநீகூறின், —வழங்கிடாசணததிலே. எ - து. அந்தறுைந்துக்க ளுடிகளைப்பொழுதிறபேதித்தனவில்லையாம். ஆசையாலான்மா வேற்றுருவத்தை விரையவெடுத்துக்கொள்ளமாட்டாது. எ-று.

இச்செய்யு ளான்மா தானின்றதூலகாயத்தைவிட்டுப்போ ய்ச சூக்குமகாயத்துடனேநின்று நன்மைதீமையையநுபவிக்கு மதொழிந்து நின்றதூலகாயததிலேபேதப்பட்டு வேறுருவெ டாதென்றுமறுக்துககூறிற்று. அதன்மம அதன்மாத்திகாயத்தை. பொருள், அத்தம், இரணடும் .ஆன்மா புட்கள்என்றது விகாரம்.

தன்மாததிகாய மதன்மாத்திகாயமென் றுள்ளவை மேலா யுங்கீழாயு முலாவுவதுநிற்பதுமாகப் பொருள்களைப்பணணுமென னில் அப்பொருள்நிற்கும் அலலதுபோகும். அஃதொழிய விர ணடுதன்மைபபடாது. மலை கோட்டமில்லை, வாயுவுக்குநிலையி ல்லையாதலாற் கூடாது. அப்படியன்று. வணடுகளும்புட்களும் போலப பறக்கைக்குச்சிறகு நிற்கைக்குக்காலும்போல வென் னில் இரணடுசெய்கையு மொருகாலத்தேவழங்கா. எ-ம். தன் மாத்திபறக்கவு மோடவும, அதன்மாத்திநிற்கவு முறங்கவுமென னில், எப்பொருளும் எககாலமும விரோதியாய் ஒருகுணபபட மாட்டாது. தாவரததுக்குத் தன்மாத்திகாயங்கூடாது, சங்கமத துக்கிரண்டுங்கூடுமென்னிற் சாவுத்தக்குமொக்குமென்பது கூ டாதுஎன்க. சங்கமங்கட் கொருக்காலததுங் கூடாததனைல் நித தியத்துவமில்லையெனக. என்றா ஞானப்பிரகாசர்.

நீடுபாவபுண்ணியங்களானிரயவானகங்
கூடுவோர்களின்றுநின்றுகூட்டுவோர்களின்மையி
லோடுமாகணைத்திறத்திலுற்றவாறுரைத்தியேல்
வீடுமாகணைக்குநாடுமவில்லிபோலவேண்டுமே. (௬)

(இ-ள்.) நீடுபாவபுண்ணியங்களானிரயவானகங் கூடுவோர்களின்றுநின்று கூட்டுவோர்களின்மையின, எ-து. ஆன்மாக்களசெய்தபுண்ணியபாவங்களையறிந்துநின் றவற்றிலேசெலுத்துவிப்போ னொருகர்த்தாவில்லையென்றுநீசொல்லின் மிக்கபாவங்களால் நரகங்களையு மிக்கபுண்ணியங்களாற்சுவர்க்கங்களையும் பொருந்திநின றநுபவிப்பாரில்லையாம்,—ஓடுமாகணைத்திறத்திலு ற்றவாறுரைத்தியேல். எ-து. விரைந்தசெலவையுடைய பெரிய வம்பிலக்கிலேபட்டாற்போலச்செய்யப்பட்டபுண்ணியபாவங்கள் செய்தவனிடத்தே விரையத்தானேசென்று பற்றுமென்றுநீ சொல்லுகின்றாயாயின்,— வீடுமாகணைக்குநாடும் வில்லிபோல வேண்டுமே. எ-து. அப்படிவிடப்பட்ட பெரியகணைக்கு மிலக்கைநாடியெய்வானொருவில்லிபோலவேண்டுமாதலா லான்மாக்கள்செய்தகன்மங்களை யநுபவிக்கும்படிகூட்டுவா னொருகர்த்தாவேண்டும். எ - று. கூட்டுவோருமின்றென உம்மைதொக்கது. வீடுமாகணை விகாரம்.

இச்செய்யுள் நரகசுவர்க்கம் கர்த்தாவில்லையென்பதனைமறுத்துக்கூறிற்று. (௬)

---

அளவிடற்கரிதாகிய புண்ணியபாவங்கட்கீடாக நரகசொர்க்கபலன்களைக் கர்த்தாவின்றி யான்மாக்களடைவரென்னில கன்மம்ஜடமாதலா லறிந்துகூடமாட்டா, ஆன்மாக்களின் னகன்மஞ்செய்தோம் நமக்கின்னது புசிப்பென்றறியமாட்டா,எ-ம். தா

